சிவாஜி



# மறுபடியும் ஓட்டுகிறார்கள்

## ஆந்திரர்களின் அவலாசை

### தலைவருக்கு மீண்டும் ஒரு கண்டம்

திட்ட வட்டமாகத் தெரிவித்து விட்டபிறகு-தகராறு இல்லாத தெலுங்கு ஜில்லாக்களை மட்டும் கொண்டதாக ஆந்திர மாகாணம் அமைக்க ஏற்பாடுகள் அனுமதிக்கப்பட்டுவிட்ட பிறகு-மனவாடுகள் மறுபடியும் கொஞ்சம் ஓட்டப் பார்க்கிறார்கள்.

நமக்கு அவர்களைப் பற்றிய சந்தேகம் இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கிறது. மூவர் கமிட்டி முடிவை ஒப்புக்கொண்டகையோடு, சென்னை நகரத்தையும் அதன் சுற்றுப் புறத்தையும் ஒரு தனி மாகாணமாகப் பிறைவடிவில் துண்டாகப் பிரித்துவிடவேண்டுமென்ற கருத்தையும் இடைச் செருகல் செய்தபோதே இது ஏதோ விஷயம்தான் என்று நாம் சந்தேகித்தோம். தங்களுக்கு இல்லாத சென்னை நகரம் தமிழருக்கும் இல்லாது போய் விடட்டுமே என்ற கெட்ட எண்ணம் தான் அதற்கு அடிப்படை என்பதுடன் மறுபடியும் ஒருதடவை சென்னையின் மேல் "படையெடுக்கும்" சூழ்ச்சியும் அதில் தொக்கி நிற்கத்தான் செய்கிறது.

ஆனாலும் இந்த முந்திரிக்கொட்டைகளின் யோசனையைக் கேட்பார் யாருமில்லை. சந்தேகமில்லாத ஆந்திர ஜில்லாக்களில் சித்தூரைச் சேர்த்திருப்பதே தமிழர்களின் எதிர்புக்குப் பாத்திரமான விஷயம். சமீபத்தில் சித்தூர் வாசிகள் மகாநாடு ஒன்றைக் கூட்டித் தங்கள் ஆட்சேபணையைத் தெரிவித்திருக்கிறார்கள். இந்த நிலையில் புதிய ஆந்திர மாகாணம் நிலைகொள்ளும் வரையில் சென்னையைத் தாற்காலிகத் தலைநகராகக்கொள்ள வேண்டுமென்று கருதி ஓட்டப்பார்க்கிறார்கள். பின்னால் இந்த அனுபோகத் தாற்காலிக பாத்யதையைக்கூடத் தங்கள் அனாதிகாலந் தொட்டு வளர்ந்து வந்த சரித்திரப் பெருமையாக முதலீடு செய்துகொள்ளலாமென்ற சூழ்ச்சி போலும்!

அவ்வளவு அவசரமென்ன வந்தது? தலைநகரை நிச்சயம் செய்து கொண்டுவிட்டு, மேஜை நாற்காலிகளை யெல்லாம் கொண்டு போய்ப் போட்டுக்கொண்டு, கணக்கு வழக்குகளை யெல்லாம் தீர்த்துக் கொண்டு ஒருவழியாகப் புதுக் குடித்தனம் வைத்துக் கொண்டு தொலைகிறது தானே! அதற்குள் குடிமுழுகிப் போகிறதென்ன?

இந்தக் காரியங்களெல்லாம் நடைபெற நாளாகுமென்றால் அதுவரை பழையபடியே இருந்துவிட முடியாத ஆத்திரம் என்ன வந்திருக்கிறது. சென்னை விஷயத்தில் தொட்டுக்கூடப் பார்க்க தமிழர்கள் அனுமதிக்க மாட்டார்கள். மேலிடத்தாரும் இதைக் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்பதில் ஐயமில்லை.

* * *

தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் ஆந்திரமாகாணப் பிரிவினை ஏற்பட்டவுடனே தமிழ் மாகாணத்தின் பிரதம மந்திரியாக இருக்கக் கூடியவர் யார் என்ற தேர்தல் பிரச்னை ஒன்று காத்திருக்கிறது. ஆண்டு தோறும் ஆள்மாற்றம் செய்ய இனிவழியில்லையென்று முடிவு செய்யப்பட்டது பற்றிச் சென்ற வாரம் தான் நாம் பெருமூச்சு விட்டோம். அதற்குள் இப்படி ஒரு புதிய குண்டு நம்மீது விழுகிறது.

ஆந்திர சட்டசபை மெம்பர்கள் பிரிந்துபோய் விட்டபிறகு மீதமிருக்கும் காங்கிரஸ் மெம்பர்கள் தங்கள் தலைவரைத் தேர்ந்தெடுக்க நேரிடுவது தவிர்க்க முடியாததுதான் என்பதை ஒப்புக்கொள்கிறோம்.

சட்ட நுணுக்கங்களின் விளைவால் புதிய தேர்தல் வந்த போதிலும் இருக்கும் தலைவரையே ஏகமனதாகத் தேர்ந்தெடுப்பது தான் நமக்கு கௌரவமும் நன்மையும் தருவதாகும். அதைவிட்டு சந்தர்ப்பத்தை பயன் படுத்திக்கொண்டு மறுபடியும் குழப்பங்களை விளைவிக்க முயலுவது நமக்கு மேலும் கேவலத்தையே உண்டாக்கும்



பண்டிதநேருவின் அமெரிக்கா விஜயத்தைப்பற்றி எகிப்திய பத்திரிகைகள் பாராட்டி எழுதியிருக்கும் கட்டுரையின் சுருக்கம் உள் பக்கத்தில் வெளியாகியிருக்கிறது. சமாதான நோபல் பரிசுக்கு அவர்தான் தகுதியென பாராட்டுகிறது படியுங்கள்.

சிறுகதை

இல. அபிராமன்

# "நாகரீகத் திருடி"

திருச்சி ஜங்ஷன்—மன்னிக்க வும். ஜங்ஷனல்ல—சந்திப்பு. சென்னை செல்லும் வண்டிக்காக காத்துக் கொண்டிருந்தேன். வண்டி வர இன்னும் நாற்பத்தைந்து நிமிஷங்கள் இருக்கின்றன. சும்மா உட்கார்ந்திருக்க முடியுமா? பிளாட்பாரத்தை அடிபோட்டு அளந்து கொண்டிருந்தேன். அதாவது அங்குமிங்கும் உலவிக் கொண்டிருந்தேன் நான்.

நான் யாரென்று அறிமுகப் படுத்திக் கொள்ளவில்லையே உங்களிடம்.

மனித வாழ்க்கையை சிறுகதைகளின் மூலம் படம் பிடித்துக் காட்டும்.........

"ஓ! எழுத்தாளரா."

ஆமாம் எழுத்தாளன் தான்.

கிழிந்த சட்டைக்குள் என்னுடல் புகுந்து கொண்டிருப்பதைப் பற்றி கேட்டு விடாதீர்கள்? பிறந்த மனிதனே செத்து விடுகிறான். கேவலம் சட்டை மார்க்கண்டேயனைப் போல் அழியாமல்; கிழியாமல் இருக்க, என் சட்டை எந்த சிவனிடமும் சிரஞ்சீவி வரம் பெற்றதில்லையே.

காவியேறிய வேஷ்டி.

"வண்ணானிடம் போட்டால் என்னையா?" என நீங்கள் கேட்டு விடலாம்.

அந்த வேஷ்டியை வண்ணான் அடித்துத் துவைத்துப் பிழிந்து சித்ர வதை செய்வானே!

வேஷ்டியை அந்த சித்ர வதைக் குட்படுத்தக் கூடாதென்ற தயாள குணம் தான்.

குரங்காட்டிக்கு கோல் முக்கியம்—அதைப் போல், எழுத்தாளனுக்கும் பேனா முக்கியம். இதைக் கருதி தானோ என்னவோ என் நண்பன் எனக்கொரு பார்க்கர்பேனா பரிசளித்திருந்தான்.

இதோ—அந்த பார்க்கர் பேனா என் சட்டைப் பைக்குள் கம்பீரமாக—தனக்குரிய தனிப் பெருமையுடன் வீற்றிருக்கிறது. அதன் விலை ஐம்பது ரூபாயோ? அறுபது ரூபாயோ என் நண்பன் கடிதத்தில் எழுதி இருந்தான் விலை நினைவில்லை—நானா வாங்கினேன்; விலையை நினைவு வைத்துக் கொண்டிருக்க? வழ வழா வென்று அந்தப் பேனாவால் எழுதும் போது.........ஆஹா கற்பனை என்ன குவியாக தடைபடா ஊற்றைப் போல பெருகும் தெரியுமா?

"உஸ்," என்ற பெரு மூச்சுடன் களைத்து வந்து நின்றது, அந்த இரும்பு உலோக கரும் பூதகரமான இன்ஜின்.

என்ன கூட்டம்! என்ன கூட்டம்!!

அடித்துப் பிடித்துக்கொண்டு ஏற முயற்சித்தேன். நான் குஸ்திப் பழகாததால் ஏற்பட்ட தவறை அன்று தான் உண்மையில் உணர்ந்தேன்.

என் முகத்தில் இடித்து முத்தமிட்ட முழங்கைகளும் என் கால்களை மிதித்து வைத்த செருப்புக் கால்களும்—என் உடலில் மோதி துன்புறுத்தி உபத்திரவம் செய்ய உரிமை கொண்டாடிய பெட்டிப் படுக்கைகளும்.........அப்பப்ப! கஷ்டத்தை" என்னென்று சொல்வேன் சுவாமி," என்று பாடவேண்டியதுதான் நான் பட்ட பாட்டை.

ஆனால் நான்புத்திசாலி. பாடவில்லை,

கடைசியில் ஒருவிதமாக வண்டியினுள் புகுந்துவிட்டேன். ஆனால் உட்காரத்தான் இடமில்லை.

.........ம்.........என்ன செய்வது? நிற்கவேண்டியது தான் நின்றால் கால்களுக்குப் பலம் என்ற அர்த்தமற்ற எண்ணத்தை மனதில் நெளியவிட்டுக் கொண்டு நின்றேன்.

வண்டியில் ஓரே கூட்டம். புளி மூட்டைமாதிரி அடைந்து கிடந்தனர் பிரயாணிகள். சாமான்களுக்கு மாத்திரம் என்று எழுதப் பட்டிருக்கும் பலகைகளின் மேல் கூட ஏறிப் படுத்திருந்தனர்.

மனிதனும் ஒரு சாமான் தானே!

தோல் + தசை + எலும்பு இவைகளின் கூட்டுச் சாமான் மனிதன். இது தெரிய வில்லை ரயில்வே நிர்வாகிகளுக்கு.

"எவ்வளவு நேரந்தான் நிற்க முடியும்? இப்படி உட்காருங்கள்," என்றது பரிவு கலந்த ஒரு குரல், என்னை நோக்கி.

அந்தக் குரல்.........ஆஹா! தேனிலே தோய்த்தெடுத்த பலாச்சுளையைப் போல் இனித்தது. குரல்வந்த திக்கை நோக்கி என் பார்வையை வீசினேன்.

ஆச்சரியம்!

குளிர் மாரியை யொத்த அக்குரலை என் காதில் பெய்தது வேறு யாருமில்லை.

ஒரு பெண்.

பதினெட்டு வயதுகூட இருக்காது. இளமை எகிறிக் குதிக்கும் எழிலாள். பங்கயத்தை யொத்த முகம். அதில் பளபளக்கும் பவுடர் பூச்சு. தூய வெண்ணிறப் புடவை. துவளும் இடை. மார்பில் துள்ளி விளையாடும் இரு சடைப் பின்னல். மணிக் கட்டைத் தழுவு முத்த மிட்டுக் கொண்டிருக்கும் "ரெஸ்ட் வாச்" நவநாகரீக உலகத்தின் அழகு அவளிடம் நிரம்பி யிருந்தது.

சற்று ஒதுங்கி நகர்ந்து தன் பக்கத்தில் கையைக் காட்டி "இப்படி உட்காருங்கள்" என்றாள் அவள் மீண்டும்.

பெண்கள் இருதயமே மென்மையான இருதயம் தான் அதில் சந்தேகமே இல்லை. இந்த உண்மையை குன்றின் உச்சியில் நின்று நான் உரக்கக் கூவிக் கூறுவேன், மறுப்பவர் இருந்தால்.

அவள் ஒதுங்கி நகர்ந்துதான் உட்கார்ந்தாள். இருந்தாலும் இட நெருக்கடிதான். ஒரு ஆள் உட்கார முடியாது உட்கார்ந்தால் அவள்மேல்நான் உராய்ந்து கொண்டுதான் உட்கார வேண்டும்.

அவளே வலுவில் உட்காரச் சொல்லுகிறாள்.........ம்......... நானும் பிரம்மசாரிதான்......

அவளுக்கும் கணவன் என்று எவனும் இன்னும் நியமனம் ஆகவில்லைபோலிருக்கிறது. அது தான் கழுத்தில், கலியாண விலங்கு—தாலிக் காணப்பட வில்லை.

கல்வித் தொடர்ச்சியில் காலங் கழிக்கும் கன்னிப் பெண் போலும். அமிர்தத்தை வேண்டாமென்பார் உண்டோ?

உட்கார்ந்தேன் அவள் பக்கத்தில். அவள் உடலும் என் உடலும் உராய்ந்து கொண்டிருந்தது. அந்த சமயத்தில் என் உடலில் உச்சி முதல் உள்ளங்கால் வரை பாய்ந்தோடிய உணர்வு.........என்னை ஒருபுது உலகிற்கு அழைத்துச் சென்றது. பவுடர் வாசமும், கூந்தல் தைலத்தின் பரிமள கந்தமும், என்னை விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையில் மிதக்கச் செய்தன.

காதல்.........காதல் உலகம்......என்றெல்லாம் கதைகளில் கொட்டியளந்ததுண்டு நான்.

அனுபவ பூர்வமாய்.........ஆமாம்.........இதுதான் முதல் தடவை.

அவள் கரம்—மலர்க்கரம் என்தோளைச் சுற்றி வளைத்து அணைத்தது. இன்பத்தால் என் இருதயம் காற்றடித்த பலூனின் நிலையடைந்தது.

மோட்சசாம்ராஜ்யம், சொர்க்கலோகம் என்றெல்லாம் சொல்கிறார்களே, அந்த லோகத்தில் பொன்னாசனத்தின் முதல் வரிசையில் முதலில் உட்கார்ந்திருப்பது போல் பூரித்தது என் நெஞ்சம்.

இந்த இன்ப போதையில் மூழ்கி இருக்கும் எனக்கு ஸ்டேஷன்கள் வருவதுபோவதுகூடத் தெரியவில்லை. எப்படித் தெரியும்?

ஏதோ ஒரு ஸ்டேஷனில் வண்டி ஒரு குலுக்கு குலுக்கி நின்றது. அந்த குலுக்கலால் அவள் என்மீதும் நான் அவள் மீதும் மோதிக் கொண்டோம். அந்த மோதுதல் என் இன்பச் சுடர் விளக்கிற்கு ஓர் தூண்டுகோல்.

ரயிலே! நீ வாழ்க! என்று வாழ்த்திற்று என் உள்ளம். ஆனால், அடுத்த கணம் ஒரு பயங்கரப் பேரிடி. இவள் அந்த ஸ்டேஷனில் இறங்கி விட்டாள்.

அவள் போகும் போது ஒரு புன்னகை வீச்சு, "போய் வருகிறேன்" என்ற தேன் சொல் அவ்வளவுதான்.

அவள்—பெயர் தெரியா அப் பேரழகி ஜனத்திரளிடையே மறைந்து போனாள்.

அவ்வளவுதான் நான் கொடுத்து வைத்தது.

எனக்கு என்னவோ போலிருந்தது, ஒன்றிலும் மனம் ஓடவில்லை. வண்டி நகர்ந்துவிட்டது. நோக்கமற்று எங்கோ பார்த்துக் கொண்டிருந்தேன்.

"டேய், 'புபிதா' எங்கேடா இருக்கே," என்ற கேள்விக் குரலுடன், முதுகில் ஒரு அடியும் விழுந்தது.

"புபிதா" என்பது என் புனை பெயர். நான் எழுத்தாளன் அல்லவா? என் புனைபெயர் என் நண்பர்களுக்குத் தான் தெரியும். புனை பெயருக்குள் புகுந்து கொள்வதுதான் தற்கால எழுத்தாளரின் தனிப் பெரும் செயலாயிற்றே? நான்மட்டும் அதற்கு விதி விலக்கா?

என்புனை பெயரைச் சொல்லிக் கூப்பிடுவதும் அல்லாமல் 'டேய்' என்று சர்வ சுதந்திரமாக அழைக்கும் ஆளை ஆச்சரியக் கண்களுடன் திரும்பிப் பார்த்தேன்.

வேறுயாருமில்லை, என் பால்ய நண்பன் 'பாபு'தான். சில ஆண்டுகட்குப்பின் அன்றுதான் அவனைப் பார்த்தேன்.

காமிராவும் கையுமாக ஆள் வெகு தடபுடலாக இருந்தான். என்னடா இது? எங்கே இருக்கே? என்ன சமாசாரம்? கடிதத் தொடர்பு கூட இல்லே! கடல் கடந்து எங்காவது கண் காணா பிரதேசத்திற்கு போயிட்

(11-ம் பக்கம் பார்க்க)

# சிவாஜி

ஆசிரியர் :—திருலோக சீதாராம்

| கோட்டை | திருச்சி, 4—12—49 | முற்றுகை |
| --- | --- | --- |
| 15 | விரோதி-ஞு கார்த்திகை-மீ, 19-உ | 1 |

**"சிவாஜி" சந்தா**

ஆண்டு 1-க்கு ரூ. 3 8 0
தனிப்பிரதி அணா. 1
ஒரு வருஷத்திற்கு குறைந்த சந்தா கிடையாது.

மானேஜர் : சிவாஜி
தபால் பெட்டி நெ. 332
தெப்பக்குளம் P. O.
திருச்சிராப்பள்ளி.


# ஏட்டுச் சுரையும் கறிக்கு ஆகிறது!

## விஞ்ஞானக் கலை நிபுணர்களைத் தேடிப் பிடிக்க முயற்சி

### அமெரிக்க உதவியும் தேவை

பாடசாலைகளிலும், கல்லூரிகளிலும், சர்வ கலா சாலைகளிலும் விஞ்ஞானக் கல்விகள் பயின்ற இளைஞர்கள் ஆண்டுதோறும் வெளியேறுகிறார்கள். பி. எஸ். ஸி. எம். எஸ். ஸி. படித்த ஆயிரக் கணக்கான வாலிபர்கள், தாங்கள் பயின்ற கலையைப் பயன்படுத்த வழியும் வசதியும் இல்லாமல் குமாஸ்தா வேலைக்கு மனுப் போடுகிறார்கள். அல்லது அதே கல்வியை கீழ்க்கடையில் பயின்றுகொண்டிருக்கும் மாணவர்களுக்குக் கற்பிக்கும் ஆசிரியர்களாக ஒரு சிலர் போய்ச் சேருகிறார்கள்.

கல்லூரிகளிலும், சர்வ கலா சாலைகளிலும் ரஸாயன சாலைகளில் பயின்று விஞ்ஞானக் கலையறிவு பெற்றவர்கள், பெட்டியடிக் கணக்குப் பிள்ளைகளாகவும் போலீஸ் இன்ஸ்பெக்டர்களாகவும், டைப் அடிக்கும் குமாஸ்தாக்களாவும் கிணறு வெட்டும் தாசில்தார்களாகவும் போனவர்கள் தாம் அதிகம். இஞ்சினீயர்களாகவோ டாக்டர்களாகவோ, விவசாய நிபுணர்களாகவோ வாழ்வில் ஈடுபட்டவர்கள் மிக மிகக் குறைவான எண்ணிக்கையினர்தாம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஏட்டுச் சுரைக்காய் பற்றிய பழமொழிகளுக்கு இவர்கள் தாம் உதாரண புருஷர்களாக விளங்கி வந்தார்கள்.

புதிய இந்தியாவின் வளர்ச்சிக்குத் தொழில்வளம் தேவைப் படுவதை இன்று உணர்ந்திருக்கும் நம்முடைய அரசினர் இப்போது இத்தகைய செல்லரித்த சிற்பங்களை யெல்லாம் மீட்டுப் பயன்படுத்திக் கொள்ள ஒரு தருணம் வந்திருப்பதை யறிந்து மகிழ்கிறோம்.

•

இப்போது ஒரு புதிய திட்டம உருவாகி வருகிறது. உலக நாகரீக வேகத்துடன் நாமும யந்திரத் தொழில நுணுக்க அறிவிலும் செயலிலும் முன்னேறிச் செலல வேண்டுமென்ற எண்ணமே இதற்குக் காரணம்.

நாட்டின் உணவு, உடை, இருக்கை, இவற்றின் அடிப் படைத் தேவைகளுக்கே பெரிய பஞ்சம் ஏற்பட்டு இவற்றைச் சமாளிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. எனவே புதியபுதிய நீர்ப்பாசன, தொழிற்சாலைத் திட்டங்கள் காண வேண்டியிருக்கிறது. யந்திர சாதனங்கள் மலிந்தாலன்றி இவை சாத்யமில்லை என்ற உண்மை கண்முன் விரிந்து கிடக்கிறது. யந்திர சாதனங்களைப் பெருக்க வேண்டுமானால் அவற்றை உற்பத்தி செய்யும் மூல யந்திரங்களும் தொழில் நிபுணர்களும் மூல தனமும்கூட நமக்குத் தேவை.

பிரதமர் நேருவின் அமெரிக்க விஜயத்தினால் இத்தகைய வசதிகள் நமக்கு விரைவில் கிடைக்கக் கூடுமென்பதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன. ஆயினும் உள்நாட்டிலேயே மூல யந்திரங்களையும் நாம் உண்டாக்கிக் கொள்வதன் மூலமும், தொழில் நிபுணர்களை உற்பத்தி செய்து கொள்வதன் மூலமும் தான் அமெரிக்க உதவியைக் கொண்டு நாம் தலைதூக்க முடியும். இல்லாவிட்டால் இந்தத் துறையின்மூலம் நாம் மீண்டும் பொருளாதாரத் தொழில் அடிமைத் தனத்திற்கே ஆளாகும் அபாயம் இருக்கிறது.

இதற்கெனவே தான் புதியதாக சிபார்சு செய்யப்பட்டிருக்கும் திட்டத்தில் இரண்டு வழிகள் கூறப்பட்டிருக்கின்றன.

(1) ஏற்கனவே விஞ்ஞானம் பயின்று, அந்த அறிவே தேவையில்லாத வேறு வேலைகளில் ஈடுபட்டிருக்கும் நபர்களை மீட்டுப் பயன்படுத்திக் கொள்வது. புதிய மாணவர்களைத் தயாரித்து எடுத்துக் கொள்வது.

(2) ஏற்கனவே இருக்கும் தொழில்களை வளப்படுத்துவதுடன் புதிய தொழில்களைத் தொடங்கிப் பயனைப் பெருக்குவது. இதற்கு தேவையான நிபுணர்களை நாடெங்கு மிருக்கும் ஸ்தாபனங்களிலிருந்து பெறுவது.

திறமையும் பயனுமே கருத்திற் கொண்டு இந்த வேலையைத் தொடங்குவதென்றால் தான் வெற்றி காணமுடியுமென்பதைக் கூற வேண்டியதில்லை.

இன்று எத்தனையோ காரணங்களால் எஞ்சினீயரிங் மருத்துவக் கல்லூரியில் இடங் கிடைக்காமல் அவதிப்படும் மாணவர்களின் தொகை கணக்கில்லை. எனவே விரும்பி முன்வரும் மாணவர்களுக் கெல்லாம் தகுதியறிந்து இடம் கிடைக்கச் செய்வதில் அரசாங்கம் கவனம் செலுத்த வேண்டும்.

வரவு செலவுச் சிக்கல்களின் காரணமாக இத்தகைய கல்லூரிகளுக்குக் கட்டிட வசதிகள் செய்வதை ஒத்தி வைக்கலாமே தவிர வேறுவழிகளில் சிக்கனம் செய்ய இயலாதென்ற கருத்தை சமீபத்தில் மந்திரி சபையினர் வெளியிட்டருப்பதை இங்கே நாம் நினைத்துப் பார்க்க வேண்டியிருக்கிறது.

(12-ம் பக்கம் பார்க்க)

# வியப்பும் வேதனையும் (2)

"தென்னிந்தியன்"

போத்தானை அமுக்கினால் ஓட் பதிவாகிவிடும் யந்திரம் ஒன்றைப் பற்றி தினசரிப் பத்திரிகைகள் வெளியிட்ட அதிசயச் செய்தியைப் பற்றி இந்தத் தொடரின் முதல் கட்டுரை 13—11—49 சிவாஜியில் பிரசுரமாகி யிருந்ததல்லவா? கோவை அறிஞர் ஜி. டி நாயுடு அவர்கள் 12 ஆண்டுகளுக்கு முன்பே கண்டுபிடித்த யந்திரம் பற்றிக் கட்டுரையாளர் தரும் விளக்கத்தைப் படியுங்கள்.

— ஆசிரியர்

"பொத்தானை அமுக்கினால் உடனே ஓட் பதிவாகிவிடுகிறதாம்" என்ற செய்தியைப் பிரசுரித்த செய்தித் தாள்கள் அந்த யந்திரத்தைப் பற்றிய முழு விபரமும் கொடுக்கவில்லை. மின்சாரத்தால் அந்த யந்திரம் இயங்குகிறதா? அல்லது வில் விசையால் இயங்குகிறதா? ஊர்கள் தோறும் அவற்றைத் தூக்கிச் செல்ல முடியுமா? மின்சார வசதியில்லாத இடங்களில் இவை பயன்படுமா வென்றெல்லாம் அந்தச்செய்தியில் விளக்கமான தகவல்கள் ஒன்றும் குறிப்பிடப்பட வில்லை. செய்தி அவ்வளவு சுருக்கமாகத்தான் கிடைத்தது போலும். போகட்டும், ஜி. டி. நாயுடு கண்டு பிடித்த ஓட் பதிவு யந்திரம் பற்றிய விபரம் நான் தருகிறேன் கேளுங்கள்.

ஆம் நாயுடு அவர்களின் ஓட் பதிவு யந்திரம் வெளி நாட்டுச் சரக்கல்ல சுத்த சுதேசி. நாயுடு அவர்களே கண்டு பிடித்தது தான். 1937-ல் சென்னை மாநகரில் நடைபெற்ற ஒரு கண்காட்சியில் அந்த ஓட் பதிவு யந்திரத்தை அவர் இயக்கிக் காட்டினார். "போது விரோதிகள் யார்?" என்ற ஒரு கேள்வியைப்போட்டு சில விடைகளையும் பொறித்த ஒரு கார்டு காட்சிசாலைக்கு வந்தவர்களிடம் கொடுத்தார். விரும்புகிறவர்கள் அந்த விடைகளில் தங்களுக்குச் சரி என்று தோன்றுகிற விடைக்கு ஓட் போட்டு அந்த யந்திரத்தை இயக்கிப் பார்க்க வசதி செய்து கொடுத்தார் நாயுடு.

நமது கவர்னர் ஜெனரல் ராஜாஜி அன்று சென்னை மாகாணப் பிரதம மந்திரியாக இருந்தார். சத்தியமூர்த்தியுடன் கூட ராஜாஜியும் காட்சிசாலைக்கு விஜயம் செய்து அந்த யந்திரத்தைப் பார்வையிட்டார்கள். ஓட் பதிவுகளில் யாதொரு பித்தலாட்டமும் செய்ய முடியாதவாறு அந்த யந்திரம் தயாரிக்கப் பட்டிருந்தைக் கண்டு சத்யமூர்த்தி அதிசயித்துப் பாராட்டினார்.

இப்படி ஒரு யந்திரம் இயற்ற வேண்டுமென்ற எண்ணம் நாயுடு அவர்களுக்கு எப்படி உதயமாயிற்று என்பது மிகவும் ரஸமானது. அதற்குக் கொஞ்ச காலத்திற்கு முன்பு நடைபெற்ற ஒரு தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகரை எதிர்த்து நாயுடு நின்றார். ஓட் பதிவுகள் முடிவடைந்து பெட்டிகள் எல்லாம் தேர்தல் அதிகாரியின் பரிசீலனைக்குச் சென்று கொண்டிருக்கும் நள்ளிரவு. ஒரு சிலர் தேர்தல் வித்தைக்காரர்கள் நாயுடு அவர்களிடம் ஓடி வந்து பேரம் பேசினார்கள். ஐயாயிரம் ரூபாய் கொடுத்தால் காங்கிரஸ் அபேட்சகர் பெட்டிகளிலிருந்து 5 ஆயிரம் ஓட்டுகளை நாயுடு அவர்களின் பெட்டிக்கு மாற்றி விட்டு, மாற்றிய அடையாளம் தெரியாமல் மறைத்துவிடுவதாக அவர்கள் நாயுடு அவர்களுக்கு "உதவி" செய்வதாகக் கூறினார்கள். அவர்கள் இதைக் கூறிய போது அதன் விளைவைப் பற்றிய நினைவைவிட இப்படிச் செய்ய முடியுமென்ற உண்மை தான் அவருடைய கவனத்தைக் கலைத்துச் சிந்தனையை தூண்டி விட்டது. இப்படிப் பித்தலாட்டங்கள் நடைபெறுமலிருக்க ஒரு வழியை இவருடைய யந்திர மூளை ஆலோசிக்க ஆரம்பித்துவிட்டது. எனவே தன பெட்டிகளிலிருந்து வேண்டுமானால் ஓட்டுகளைத் திருடி எதிரியின் பெட்டிகளில் சேர்த்து விடுவதில் தனக்கு ஆட்சேபணை யில்லையென்று உதவி செய்யவந்த தேர்தல் நிபுணர்களிடம் விடை கூறி விட்டு ஓட் பதிவு யந்திர ஆராய்ச்சியில் இறங்கி விட்டார் நாயுடு. அந்தத் தேர்தலில் நாயுடு அவர்கள் வெற்றிபெற வில்லை. வெற்றிபெற வேண்டுமென்று அவர் நிற்கவுமில்லை. யாரையும் போட்டியின்றித் தேர்ந்தெடுக்க விடக்கூடாது என்ற ஒரு பிடிவாதம் தவிர தேர்தலுக்கு நின்றதற்கு வேறு ஒரு காரணமும் அவருக்குக் கிடையாது. அது வேறு விஷயம். இப்போது நம் கவனத்திற்கு உரியது அந்த யந்திரமல்லவா?

நாயுடு அவர்கள் இந்தச் சம்பவத்தின் விளைவாகக் கண்டு பிடித்ததுதான் அந்த யந்திரம் மின்சார உதவியின்றி வெறும் விசையாலேயே (லிவர்) இயங்கக் கூடியது. எளிதில் எங்கும் தூக்கிச் செல்லக்கூடியது.

பனிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு தயாரிக்கபபட்ட அந்த யந்திரம் இப்போதும அவருடைய தொழிற்சாலையில் துருப்பிடித்துக் கிடக்கிறது. கவனிக்காமல் கிடந்துவிட்டபடியால் சில பகுதிகள் சீர்குலைந்தும் போயின.

சொருகுத் தகடுகள் இணைத்த ஒரு கதவு, அந்தக் கதவை எவ்வளவு பெரிய வாசலிலும் கொண்டுவிரித்துப் பொருத்தலாம். கதவுக்கு வெளியே நீண்ட குழாய்களை இணைத்து 20, அல்லது 30 அடிககு இப்பால் ஒரு மேஜையில் கொணடு வநது பொருத்தப்படுகிறது. அதே குழாயின் தொடர்ச்சி கதவுக்கு உட்புறமும் நீண்டு சென்று அறைக்குள் இருக்கும் அப்பெட்டியில இணைகிறது. வெளியே இருக்கும் மேஜையில் ஒரு பொத்தான். உள்ளே இருக்கும ஓட்டுப் பெட்டியில் அம்பக்ஷகர்களின் எண்ணிக்யையுடன் ஒன்று கூட்டி அந்த எண்ணிககைக்குப் பொத்தான்கள் அமைக்கப் பட்டிருக்கும். இந்தப் பொத்தான்களை தேவைக் கேற்றபடி சேர்க்கவும் அகற்றவும் வசதியுண்டு. கீழே இருக்கும் குழாய்க்குள் வில் விசைக் கம்பிகள் உள்ளன. இவை வெளியே இருக்கும் மேஜை, கதவு நிலைப்படி, ஓட்டுப்பெட்டி இவற்றை இணைக்கின்றன.

வாக்காளர் ஒவ்வொருவரிடமும் ஒரு அடையாளச்சீட்டு முன்னமேயே கொடுக்கப்பட்டிருக்கும் ரேஷன்கார்டு விநியோகம்போல. குறிப்பிட்ட நபர் வாக்காளர்தான் என்பதை அடையாளக் கார்டில் தேர்தல் அதிகாரியின் முன்னிலையில் கையெழுத்திட்டோ ரேகைவைத்துவிட்டோ நிரூபித்த பின்னர் பதிவு வேலை ஆரம்பமாகிறது. மேஜையின் முன்னால் வாக்காளர் வந்து நின்று அவர் தகுதி ஒப்புக்கொள்ளப்பட்ட வுடனே மேஜை மேலிருக்கும் பொத்தானை அதிகாரி அமுக்குவார். இதுவரையில் இவருடன் இத்தனைபேர் வாக்குப்பதிவு செய்ய அனுமதிக்கப்பட்டார்கள் என்ற எண்ணிக்கை மேஜைமேல் இருக்கும் மீட்டரில் பதிவாகிவிடுகிறது. இதன் பிறகு வாக்காளர்கள் நடந்துசென்று கதவு நிலைப்படியில் ஏறவேண்டும். அவருடைய எடைக்கனத்தால் படியின் அடியில் ஓடிக்கொண்டிருக்கும் குழாய்க்குள் உள்ள விசை அசைகிறது. வெளியே யிருக்கும் மேஜைப் பொத்தானும் அமுக்கப்பட்டு வாக்காளர் வாசற்படியில் சென்று நின்றதும் கதவு உட்புறமாகத் திறந்து கொள்கிறது. வாக்காளர் கதவு நிலையைத் தாண்டி அறைக்குள் நுழைந்த உடனே கதவுதானே மூடிக்கொண்டுவிடும்.

இப்போது அறைக்குள் அந்தர்யாமியான கடவுள்தவிர வாக்காளருடன் அந்த யந்திரம்ஒன்று தான் இருக்கிறது. இனி அவர் வாக்குப்பதிவு செய்வதையாரும் காணமுடியாது. அவர் வாக்குப் பதிவு செய்யாமல் வெளியே வரவும் முடியாது.

வாக்குப்பெட்டியில் வரிசையாகப் பொத்தான்கள். ஒவ்வொரு பொத்தானுக்கும் கீழே அபேட்சகரின் பெயர் இரண்டு மூன்று மொழிகளில் எழுதப்பட்டிருக்கிறது. மேலே அபேட்சகருக்குக் குறிக்கப்பட்ட வர்ணம் பூசப்பட்ட ஒரு கட்டம் தெரிகிறது. தேவையானால் அபேட்சகரின் புகைப்படம்கூட அங்கே பொருத்த வசதியுண்டு. அபேட்சகர்களின் எண்ணிக்கைக்கு மேல் அதிகப்படியாக ஒரு பொத்தான் காலியாக நிற்கிறது.

யாருக்கு வாக்களிக்க விரும்புகிறாரோ அவருடைய பொத்தானை உள்ளே அமுக்குகிறார். பொத்தானுக்கு அடியில் இருக்கும் மீடரில் உடனே அந்த அபேட்சகருக்கு இத்தனையாவது வாக்குப்பதிவு ஆகிவிட்டதென்ற எண்ணிக்கை தோன்றுகிறது. யாருக்கும் வாக்களிக்க விரும்பாமல் நடுநிலை வகிக்க விரும்பும் வாக்காளர் காலியாக

(12-ம் பக்கம் பார்க்க)




## 10. லீலாவின் சூழ்ச்சியும், மோகினியின் மனம் மாறுதலும்

இப்பொழுது மாஸ்டர் சிவன் முன்போல் 'மாலதி'' நிலையத்திற்குச் செல்லுவதில்லை. அனுதாஸ்ரமத்தின் பூர்வாங்க வேலைகளைத் துவக்கி விட்ட படியால் அதற்காகப் பிளான்கள் தயாரிப்பதிலும் சாமான்கள் சேகரிப்பதிலுமாகத் தன்முழுக் கவனத்தையும் செலுத்திக் கொண்டிருந்தான். இக்காரியங் களைக் கவனிக்க காலை ஆறு மணியிலிருந்து இரவு பத்துமணி வரையில் நேரம் சரியாகப் போய் விடும். இந்நிலையில் அவன் மாலதி நிலையத்திற்குச் செல்லுவ தெங்கே, மோகினியோடு அளவளாவுவதெங்கே. ஆனால் அவன் அவளை ஒரு விநாடி கூட மறக்க முடியவில்லை. அவளை அடிக்கடி தன் மனக் கண்ணின் முன் நிறுத்திப் பார்த்து மகிழ்வான். அவள் தன் முகத்தைத் சட்டென்று திருப்பும்போது அவளுடைய நீண்ட சடை குலுங்கி கணக்காக அவளுடைய தோள்பட்டையின் முன்புறமாக வந்து விழுவதை உருவகப் படுத்திப் பார்ப்பான். அவன் உள்ளம் பூரித்து விடும். "ஆகா! இந்த ஜடை அழகு ஒன்று போதுமே என்னை மயக்க என் றெண்ணுவான்.

மோகினி அவனைச் சில நாட் களாகக் காண முடியாததால் அலைகடல் துரும்பெனத் தவித் தாள். அவன் வராத காரணங் களொன்றும் அவளுக்குத் தெரியாது. அவன் பிரிவைச்சகித்துக் கொண்டு மேலும் ஒரு நிமிஷங் கூட அவள் உயிர் தங்க முடியாது போல் தோன்றியது அவளுக்கு. தானே போய் அவர் வீட்டில் பார்த்து வரலாமா, அல்லது வேலைக்காரி மூலம் சொல்லி அனுப்பி வரவழைக்கலாமா என்று இப்படியெல்லாம் தன் மனத்தையே வினவிக் கொண்டாள். முன்னது போல் செய்ய அவளுக்குத் தைரியமில்லை. பின்னது போல் செய்யலாம். ஆனாலும் அதில் தயங்கினாள். கடைசியில் எப்படியோ லீலா மூலம் வரச் சொல்லி ஒரு வேண்டுகோள் அனுப்பலாம் என எண்ணித் துணிந்து லீலாவிடம் வந்தாள். எடுத்த எடுப்பிலேயே அதை அவளிடம் சொல்லக் கூடாதென்றெண்ணி அவள் வாயைச் சற்றுக் கிண்ட ஆரம்பித்தாள்.

மோகினி:—ஊரிலே எல்லாம் எப்படியிருக்கு?

லீலா :—ஊரிலே என்னம்மா இருக்கிறது. மரம் இருக்கிறது, மட்டை இருக்கிறது, குளம் இருக்கிறது; குட்டை இருக்கிறது. கோவில் இருக்கிறது. கோவில் தாசி இருக்கிறாள்.

மோகினி :—"போதுமடி போதும். உன்னை இதையெல்லாம் கேட்கவில்லை. எனக்குத் தெரியும், இவையெல்லாம் இருப்பது. வேறு ஏதாவது விசேஷம் உண்டா என்று கேட்டேன்.

லீலா :—அதுவா! வேண்டிய மட்டும் இருக்கின்றன அம்மா. கருப்புக் கோழி வெள்ளை முட்டை இடுகிறது. வெள்ளைக் கோழியோ என்றால் அதுவும் வெள்ளை முட்டைதான் இடுகிறது. நேற்று பாருங்களம்மா. எங்க பக்கத்து வீட்டு பத்மாவின் புருஷர் மார்க்கெட்டுக்குப் புறப்படும்போது "வீட்டிலே என்னடி இருக்கு?" என்று சம் சாரத்தை ஒரு அதட்டல்போட் டார். அந்த அம்மாள் அடுக்க ஆரம்பித்து விட்டாள். "மூட் டைப் பூச்சி. நட்டுவாங்கிளி இருக்கு நண்டு இருக்கு. நத்தை இருக்கு, தேள் இருக்கு, பாம்பு இருக்கு'' என்று. அப்புறம் அவர் "அடியே, அதைக் கேட்க வில்லையடி. நான் மார்க்கெட் டுக்குப் போகிறேன். வீட்டில் என்னென்ன காய்கறி இருக்கு என்று தெரிந்தால் இல்லாததை வாங்கி வரலாமென்று கேட் டேன்'' என்று சொன்னாராம். அதற்கப்புறந்தான் அவளுக்குப் புரிந்தது.

"இன்னொரு சமாச்சாரமல்ல! நம்ப டாக்டர் சுப்பிரமணியிடம் இருக்கிறானே வேலாயுதம் அவனொரு சுத்த அசடு. அந்த டாக் டரைப் போலத்தான்! ஒரு நாள் அவர் அவனைச் சில சாமான்கள் வாங்கிக் கொண்டு "பில்லுங் கையுமாக வாடா'' என்றாராம். அவன் சாமான்களை யெல்லாம் வாங்கிக் கொண்டு ஒரு புல்லுக் கட்டையும் தூக்கிக் கொண்டு வந்து விட்டானாம்! இன்னொரு நாள் செட்டியார் கடையில் பத்து ரூபாய் நோட்டுக்குச் சில் லரை மாற்றிக் கொண்டு "செட் டியாரே, எங்க எஜமான் கண் டிப்புக்காரர். இந்தச் சில்லரை மாற்றிக் கொண்டதற்கு பில் போட்டுக் கொடுத்திடுங்கோ'' என்றானும்.

"நமக்கு பக்கத்து வீட்டில் இருக்கிறாரே, பாங் செகரட்டரி விஜயராவ்.........

மோகினி சிரித்துவிட்டு "அடி குறும்புக்காரி, அதைப் பற்றி யெல்லாம் நான் கேட்கவில்லை. மனிதர்களைப் பற்றி யல்லவா கேட்கிறேன்.

லீலா :—மனிதர்களா! நல்லவர்கள் கெட்டவர்களாகிறார் கள்! கெட்டவர்கள் நல்லவர் களாகிறார்கள்!

மோகினி :—அதென்ன கூத்து! அப்படி யார் நல்ல மனிதர் கெட்ட மனிதராகி விட் டார்? கெட்ட மனிதர் நல்ல மனிதராகி விட்டார்?

லீலா :—பத்து நாட்களுக்கு முன்னால் நம்ம ஊர் சிவன் கோவிலில் ஒரு பெரிய சம்பவம் நடந்து போய்விட்டது. பெரிய ரகளையாம்!

மோகினி :—அதென்ன, அப்படிப்பட்ட ரகளை?

லீலா :—அதில் சம்பந்தப் பட்ட பெரிய மனிதர் பெயரைச் சொன்னால் நம்பமாட்டீர்கள்! நான் கூட முதலில் நம்பவில்லை.

மோகினி:—அது யாரடி அப் படிப்பட்ட பெரிய மனிதர்—கொம்பு முளைத்தவர்! அவ்வளவு பெரிய ரகளையைச் செய்தவர்?

லீலா :—நமக்கு ரொம்பவும் பக்கத்தில் உள்ளவர்தான் அவரும்.

மோகினி :—பக்கத்திலோ, தூரத்திலோ, அதை யெல்லாம் யாரடி உன்னைக் கேட்டார்கள். விஷயத்தைச் சொல்லடி என்றால் வீணை வளர்த்துகிறாயே.

லீலா :—நம்ப சிவன் தான் அத்தனை பெரிய........

மோகினி :—வெட்கம் தவழ்ந்த சிரிப்புடன், போடி விஷமக்காரி, கடைசியில் இதுவும் உன்னுடைய குறும்புத் தனத்தின் கைவரிசைதானா? சரி, சரி பரிகாசம் போதும். போய் வேலையைப் பார்.''

லீலா :—இல்லையம்மா. விஷயம் முழுவதையும் கேட்டுவிட்டு அப்புறம் சொல்லுங்களேன்.

மோகினி :—சரி. என்ன அவருக்கு?

(8-ம் பக்கம் பார்க்க)

# சிவாஜி

அறவலி காத்துநாளும் அன்னையின் பணிக்கென்றே
உறையிலே உறங்கும் வீரம் உருவிநேம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி. 4—12—49


# பதினைந்தாம் ஆண்டு

பதினான்கு ஆண்டுகளின் இடையறாத சேவையினால் சுடரேறிய உள்ளத்தூய்மையுடன் 'சிவாஜி' தன்னைப் பதினைந்தாம் ஆண்டில் அர்ப்பணித்துக்கொள்ளும் நன்னாள் இன்று.

வாரந்தோறும் தவறாது வெளிவந்து நெடிய ஆண்டுகள் பதினான்கினைக் கடந்த வெற்றி உணர்ச்சி புத்தாண்டின் முனைப்பாக இலங்குகிறது.

வயதாக ஆக வாலிபம் மாறும் முதுமை வந்தடையும், உடல் தளரும், உள்ளமும் சோரும், உயிரும் நடுங்கும், இது இயற்கையின் சிருஷ்டிகள் அனைத்திற்கும் இயல்பானவை. காலத்தின் ஓட்டம் கருத்தில் வாட்டத்தைக் காட்டும்.

கலையுலகத்தின் கதையே வேறு. காலத்தின் சீறலோ, குமுறலோ, சுழிப்போ, கலையை எதுவும் செய்யமுடியாது. அதற்குப்பதில் காலம் பறந்து ஓடஓட, கலையின் தொன்மைக்கும் மேன்மைக்குமே அது அடிப்படையாக இருக்கிறது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த மனிதன் இன்று இல்லையாயினும் அவனுடைய சிந்தனைச் செல்வங்களான கலைகள் இலக்கியங்களாகவும், சிற்பங்களாகவும் சித்திரங்களாகவும்காலத்தைவென்று ஒளிவீசுகின்றன. மனிதனைவிட அவன் சிருஷ்டி மகத்தானதாக இருக்கிறது. காலத்தின்கைப்பிடியில் சிக்குண்டு அழியும் மனிதன், தன் மனோசக்தியால் வடித்தெடுத்த கலைகளைக்கொண்டுதன்னை அழிக்கும் காலசக்தியையும் வென்றுவிடுவதுவிந்தைதான். காலவெள்ளத்தில் நிலைகாணமுயன்ற மனிதனின் சாகஸமே கலைகள் போலும்!

பத்திரிகை ஒருகலைதான். நமக்குப் புதியதாகக் கிடைத்த அருங்கலை. அதன் பயன் முழுவதையும் நாம் இன்னமும் நேருக்கு நேர் கண்டறிந்து அனுபவத்தாகிவிடவில்லை.

மேனாட்டு நாகரீகச் சுழலில் நாம் மூழ்கி முத்தெடுத்தபோது அருமணிகளில் பத்திரிகையும் ஒன்று.

இந்தக்கலை விதை நம்முடைய மண்ணில் முளைகொண்டு எழச்செய்ய அறிஞர் பலர் அரும்பாடுபட்டிருக்கின்றனர். சென்ற காலங்களில் பத்திரிகைக் கலையில் ஈடுபட்டு, வாழ்வும், பொருளும், வாரியிறைத்துத் தங்களைத் தியாகம் செய்துகொண்டவர்களின் எண்ணிக்கைக்கு அளவில்லை. அவர்களுடைய வாழ்வெல்லாம் ரஸாயன பரிசோதனைகளாகத் திகழ்ந்து முயற்சியும் பயனுமெல்லாம் உரமாகி மக்கிவிட்ட மண்ணில் தான் இன்று புதுப்புது முயற்சிகள் தோன்ற முடிகிறது. எல்லையற்ற இந்த பரிசோதனையில் பதினான்கு ஆண்டுகள் ஈடுபட்டு உழைத்து வந்திருக்கும் 'சிவாஜி' பெருமிதம் அடைய உரிமையுண்டு.

பத்திரிகை படிக்கவேண்டுமென்ற எண்ணத்தை மக்களிடம் தோற்றுவிப்பதற்காக உழைத்து, உழைப்பின் பயனைக் காணாது மறைந்த மேதைகளை இன்று அடையாளம் கூடக் காணமுடியவில்லை.

காகிதத்திற்கும் அச்சுக்கும் தபால்செலவுக்கும் கடன் வாங்கிப் போட்டுக் கலைவளர்த்து தங்கள் வயிற்றுக்கு ஒன்றுமின்றி, அச்சாகிவந்த இதழைப் பார்த்தே பூரித்துப் போய் தங்களை மறந்துவிட்டிருந்த பத்திரிகாசிரியர்களையெல்லாம் பற்றி நாம் ஆராய்ந்துதான் கண்டுபிடிக்கவேண்டும்.

காலம் மாறிக் கொண்டிருப்பதைக் காணவும், பயங்கரமான நாட்களில் வாழ்வைத்தொடங்கி கால வளர்ச்சியுடன் தானும் வளர்ந்து பதினைந்தாவது ஆண்டைத் தொடங்கவும் முடிகிறதென்னும் போது, அது எவ்வளவு பெரிய சாதனை என்ற உண்மையை உணரலாகும்.

அளவற்ற சகிப்புத் தன்மை, கலங்காத மெய்த்துணிவு, பற்றற்ற சேவை இவைதான் இந்த சாதனையின் அடிப்படை. இதை சாத்தியமாக்கிய பெருமைதமிழ் மக்களுக்கு உரியது. சோர்வு வீழ்ச்சிகள் தொண்டருக்கில்லை. புதிய ஆண்டில் புதிய இந்தியாவின்வெற்றிக்கு உழைக்கும் ஆற்றல்பெருக, தமிழ்மக்களின் ஆதரவு பெருகும் என்பதில்முழு நம்பிக்கையுடன் 'சிவாஜி' அனைவருக்கும் தன் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறான்.

—ஆசிரியர்

# திருச்சி இலக்கியவாடை

## ஸ்ரீரங்கநாதர்தேவஸ்தானம்

திருச்சியில, பல்துறை நிர்வாகங்களிலும் இலக்கியவாடை சூழ்ந்து வருவதுபற்றிச் சென்ற இதழில் குறிப்பிட்டிருந்தேனல்லவா?

ஸ்ரீரங்கம் ரங்கனாதஸ்வாமி தேவஸ்தானத்துக்கு, சென்னை அறநிலயப்பாதுகாப்புக் கழகத்தார், நிர்வாக அதிகாரியாக, திரு. ந. பிச்சமூர்த்தி அவர்களை நியமித்திருக்கிறார்கள். அருகில செட்டிகுளத்தில் இருந்த நண்பர், திருத்துறைபூண்டிக்கும், காஞ்சீவரத்திற்கும் போய்ச் சில ஆண்டுகள் இருந்துவிட்டு, எங்கும் சுற்றி ரங்கரைச் சேவிக்க வராமல் இருக்கமுடியுமா?

தமிழ் இலக்கிய மறுமலர்ச்சி உலகில திருவாளர் பிச்சமூர்த்தி அவர்களின பெயர் பிரகாசமானது. சிறுகதை இலக்கியத் துறையிலும மன நிழல் ஓவியங்களிலும் கவிதைப் புதுமைப் பரிசோதனைகளிலும் மதிப்பிற்குரிய இடம் பெற்ற நண்பரின நியமனம் திருச்சி இலக்கிய வாடைக்கு மற்றொரு சிறப்பாக அமைந்திருக்கிறது.

### ஸ்ரீரங்கம் நகரசபை

தமிழகக் கலை களஞ்சியத் தலைமை ஆசிரியர் திரு. ம. ப. பெரியசாமி தூரன் அவர்களைப்பற்றி அறிந்தவர்கள், வனமலர்க் கழகம் பற்றியும் நிச்சயம் அறிந்திருப்பார்கள். இந்தக் கழகத்தைச் சேர்ந்தவரும், ச. து. சு. யோகியார் போன்றவர்களுடன் ஒன்றுறப் பழகியவரும், பழைய "பித்தன்" ஆசிரியர் குழுவைச் சேர்ந்தவருமான திருவாளர் சுப்பராயன அவர்கள ஸ்ரீரங்கம் நகரசபைக் கமிஷனராகப் பொறுப்பேற்றிருப்பதும் இலக்கிய நண்பர்கள தெரிந்துகொள்ள வேண்டிய செய்தி.

இந்த வருஷம் வைகுண்ட ஏகாதசியினபோது ஸ்ரீரங்கம் நகரசபையார் ஒரு அருமையான பொருட் காட்சியையும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இலக்கிய ரஸிகரான நண்பர் சுப்பராயன் அவர்கள ஆணையாளராக இருக்கும்போது கண்காட்சியின சிறப்பு அதற்கு உரியதாகத்தான் இருக்குமென்று எதிர்பார்க்கலாம். நகரசபைத் தலைவர் திரு. வாஸுதேவன் அவர்கள அருங்கலை ரஸிகர். கண்காட்சிகளில சங்கீத, நடனக்கச்சேரிகள் சர்வ சாதாரணம். ஸ்ரீரங்கம் கண்காட்சியில இலக்கியக கலா ரஸனையும மிகுந்திருக்குமென்பதை இப்போதே கூறிவிடலாம். ஆம், பொருட்காட்சியின் நாட்களில இலக்கியச் சொற்பொழிவுகள்கூட உண்டு. திருச்சியின இலக்கிய வாடை ராஜீக உலகிலும் இப்படி விரிந்து மணம வீசுவது மகிழ்ச்சிக்குரியதல்லவா?

—"ஸீதாராம்"

# "தசாவதாரம்" தத்ரூபம்

"நாடகம் எப்படி?" என்று கேட்டபோது "தத்ரூபம்" என்று பதில்சொன்னேன. நண்பன் சிரித்தான். தசாவதார நாடகம் அற்புதமாக இருக்கிறது என்று கூறவிரும்பிய நான் தத்ரூபமாக இருக்கிறதென்று கூறியதுதான் அந்த நகைப்புக்குக் காரணம். அதாவது கருடவாகனத்தையோ, மச்சாவதாரத்தையோ, கூர்மாவதாரத்தையோ ஏதோ நேரில் அந்தந்தக் காலங்களில பார்த்து அனுபோகப்பட்டவன்போல, நாடகத்தில் அதெல்லாம் அப்படிஅப்படியே வருகிறதென்று ஸ்தூலமான வடிவ அத்தாட்சி தருவதுபோலிருந்திருக்க வேண்டும் "தத்ரூபம்" என்று நான்போட்ட வார்த்தை.

இப்பொருள் உவமைகள் என்பது நமது உவமையணிகளில் ஒன்று. பாற்கடல், பாம்புப்பாயல், அமுதகலசம், காமதேனு, கற்பக விருட்சம் இவையெலலாம் அந்த ரகத்தில் சேரும். அழகியை அசல ரம்பைதான் என்று கூறும்போதும், கொடைவள்ளலைக் காமதேனு என்று புகழும்போதும் இந்த உபமானங்களில் நமக்கு விரஸம் காணப்படுவதில்லை. புராணப் பொருள்களாக இருந்தபோதிலும் அவை குறிப்பிட்ட பண்புகளின் அழியாத வடிவங்களாக மனதில் பழகிப் பணபட்டுவிட்டனவல்லவா? இதைப்போலவே கண்ணுக்கும் கூட இப்படிப் பழகிப்போன இப்பொருள் சில வற்றிற்கு அழுத்தமான வடிவங்கள் உண்டு. பாத்திரங்களின் குண சித்திரங்களுடன் சிற்ப ஓவியங்களில காணும் வடிவங்களும நமது நினைவில பதிந்துவிடுகின்றன. ஆதிசேடனையும், மகாவிஷ்ணுவையும், வாமனமூர்த்தியையும விராடபுருஷனையும, நாம் பார்த்திருக்கமுடியாது. ஆனால் இவைபற்றி நமக்கு மனதில ஒரு வடிவம் ஏற்பட்டுவிடக்கூடிய அளவுக்கு அதிகமாக இவற்றைப்பற்றி அறிந்திருக்கிறோம். நவாப்பின தசாவதார நாடகத்தில, கெருடவாகனக் காட்சியையும், சேஷலோகத்தையும், மீன், ஆமை, நரசிங்க அவதாரங்களையும பார்க்கும்போது அவை ஏற்கனவே நமமுடைய மனதில் நடமாடிக் கொண்டும் அதே வடிவங்களின வண்ணம் குறையாமல் இன்னும் அதிக அழகுடன் தோன்றுகையில "தத்ரூபம்" என்று கூறாமல் என்ன செய்வது.

காவியத்திலும் ஓவியத்திலும் இப்படிக் காட்சிகளைக் காட்டுவது எளிது. மேடையில் இப்படிச் செய்வது பெரிய சாக

# திருச்சி சேவாசங்கம்
## ஸ்ரீரங்கம் கிளை

ஜீவா சேவையிலும் கலைத்தொண்டிலும் ஆர்வமுள்ள திருமதிகள் ஜெயாராஜன், குமுதினி போன்றவர்களின் முயற்சியால் திருச்சியில் நடைபெறும் திருச்சி சேவா சங்கத்தைப்பற்றி நேயர்கள் அறிவார்கள். இதன் கிளைச் சங்கம் ஒன்று ஸ்ரீரங்கத்தில் தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது. லலிதகலைகளான சங்கீதம் நாடகம் நடனம் இவற்றின் வளர்ச்சிக்கான நிகழ்ச்சிகளே இதில் முதலிடம் பெறுவன. கலையை ஒரு தொழிலாக அல்லாமல் கலையாகவே போற்றி வளர்ப்பது இதன் இலட்சியமென்று அறிவிக்கப்படுகிறது.

இதன் முதல் கலைவிழா 27-11-49-ல் நடைபெற்றபோது சங்கக் காரியதரிசி செய்த அருமையான சொற்பொழிவின் சில பகுதிகள் இங்கே தரப்படுகிறது. இத்தகைய விழாக்களின் பயனைப்பற்றிய நல்ல ஆராய்ச்சியாக அது அமைந்திருக்கிறது.

"இவ்விழாக்கள் கொண்டாடுவது பற்றி சிலர் சில கேள்விகள் கேட்கிறார்கள். இச்சமயம் அக் கேள்விகளுக்கு விடை கூறி இவ்விழாக்களைப் பற்றின எங்கள் கொள்கையை நன்கு விளக்குவது நலம் என்று நினைக்கிறேன்.

"சேவா சங்கம் ஆடலும் பாடலும் வைப்பானேன்? எத்தனையோ டிராமாக்கள், சங்கீதக் கச்சேரிகள், சினிமாக்கள், ரேடியோ எல்லாமும் பொது ஜனங்களின் விநோதத்திற்கென்று இருக்கின்றன. அப்படியிருக்க நீங்களும் இந்தக் கலை சேவையில் இறங்குவானேன் என்பது முக்கிய கேள்வி.

எத்தனையோ தறிகள் மில்கள் இருக்கின்றன. நம்மை ஏன் நமது ஆடைக்கென்று நூற்க வேண்டும் என்று காந்தியடிகள் சொன்னார்?

எத்தனையோ பாடசாலைகள் இருக்கின்றன. ஆனால் பாடசாலை இல்லாத இடத்தில் நாங்கள் ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தி இருப்பதை எவரும் ஆக்ஷேபிக்கவில்லை. இன்னும் நிறைய ஜில்லா முழுதும் ஏற்படுத்துங்கள் என்றே எங்களைக் கேட்கிறார்கள்.

எத்தனையோ ஹிந்தி பிரசாரகர்கள் இருக்கிறார்கள். ஆனால் நாங்களும் ஹிந்தி வகுப்புகள் நடத்துகிறோம்.

எத்தனையோ இருக்கிறது, நீ ஏன் செய்கிறாய் என்பது சரியான கேள்வி அல்ல. காந்தி அடிகளின் கதர் இயக்கத்தின் அடிப்படைக் கொள்கை ஒன்றே அது சுயதேவை பூர்த்தி என்ற மகத்தான கருத்து. இந்த சுயதேவை பூர்த்தி என்ற கருத்தை நாம் நன்றாக அறிந்தால் அதில் இருக்கும் திருப்தி முழுதும் தெரியும். கடையில் எத்தனையோ வீசைக் கணக்கில் கத்திரிக்காய் கொட்டி கிடக்கிறது. ஆனால் நமது தோட்டத்தில் நாம் ஒரு விதையைப் போட்டு, அதற்குத் தண்ணீர் பாய்ச்சி, அது எப்போது பூக்கும் எப்போது காய்க்கும் என்று ஆவலாகக் காத்து, தினமும் காலை கண் விழித்ததும் அதைப்போய் உற்று உற்று பார்த்து, பாட்டும் கூத்தும் எதற்கு? என்று சிலர் கேட்கலாம்.

உணவும் ஆடையும் கேவலம் சரீரத்தைப் போஷிப்பவை. ஆனால் நமது கலைகள் நமது ஆத்மாவை வளர்க்கின்றன. "உன்னிடம் இரண்டு காசு இருந்தால் ஒன்றிற்கு உணவும் மற்றொன்றிற்குப் புஷ்பமும் வாங்கிக்கொள்." என்று முகமது நபி அருளினார் என்பார்கள். உணவு வயிற்றை திருப்தி செய்ய, புஷ்பம் ஆத்மாவை திருப்தி செய்ய. ஞானமார்க்கமாகவும், பக்தி மார்க்கமாகவும் ஈச்வரனை அடைவது போலவே இசையின் மூலம் பகவானை அடைந்தவர்கள் அனேகர் நமது நாட்டில் இருந்திருக்கிறார்கள். நாரதரின் தவம் முழுவதும் இசையின் மூலம் செய்ததே.

எத்தனையோ பாடகர்கள் அற்புதமாய் பாடலாம். ஆனால் நமது பெண் ஸ ரி ரி க, ஸரிக என்று சரளி வரிசை பாடினால் அதைக் கேட்டால் இருக்கும் ஆனந்தம் பாட்டுக் கச்சேரியில் இராது. நமது தேவையை நாமே பூர்த்தி செய்வது ஒரு தனிப்பட்ட இன்பம். நமமவா குழந்தைகளின் கலையை நாம் வளர்க்காமல் யார் வளர்ப்பது? நமது தோட்டத்தில் நாம் பயிர் செய்யாமல் எத்தனை நாள் கடையில் வாங்கிச் சாப்பிடுவது?

அதெல்லாம் சரி. உணவு ஆடை என்பது முக்கிய தேவைகள். அவ்வித தேவைகளைப்பற்றி தான் காந்தியடிகள் சுய தேவை பூர்த்தி என்று சொன்னார். கோபாலனைத் தொழுதார்கள் என்பார்கள். ஈஸ்வரனை தொழுவதற்குக் கலைகள் ஒரு முக்கிய சாதனம். நமது முன்னோர்கள் பயிர் செய்யும் வகையை நமக்குக் காண்பித்திருக்கிறார்கள். கோவில்களும் கட்டிக் கொடுத்திருக்கிறார். ஆனால் நாம் எதைப் பெருமையோடு நினைக்கிறோம்? எதைப்பெருமையோடு பார்க்கிறோம்? ஒரு அமெரிக்கர் வந்தால், "அதோ பார் எங்கள் வயல்" என்று காண்பிப்போமா, "அதோ பார் எங்கள் கோயில்" என்று காண்பிப்போமா? ஒன்று முக்கிய தேவை, மற்றொன்று கலை. ஆனால் கலைதான் திருப்தி கொடுக்கும் விஷயம். எங்கள் சிற்பம், எங்கள் சங்கீதம், எங்கள் தியாகய்யர், எங்கள் பாரதி என்றே பெருமைப்படுகிறோம். நமது தேகத்தை நமது வீடுகளில் சமையல் செய்து உண்டு போஷிக்கிறோம். சீமை பிஸ்கோத்தே சாப்பிட்டுக்கொண்டு இருப்பது நல்ல ஆகாரம் ஆகாது. நமது கொள்ளேகால், காஞ்சீபுரம், உறையூர் சேலைகள்தான் நமக்குப் பிடித்த ஆடைகள். சீமை பிராக்குகள் அல்ல.

அதேபோல நமது கலைகளும் நமது முயற்சியின் பயனாக இருக்க வேண்டும். ரேடியோவிலும் கிராமபோனிலும் கேட்கும் சங்கீதமும், சினிமாவில் பார்க்கும் டிராமாக்களும் நமது ஆத்ம வளர்ச்சிக்குப் போதாது. அவை நல்ல புஷ்டியான ஆகாரம் அல்ல.

இக் கொள்கையை அனுசரித்தே காந்தி அடிகளின் ஆதாரப் பள்ளி பாட திட்டத்தில் கலை அபிவிருத்தியையும் முக்கிய பாடமாக வைத்திருக்கிறார்கள். இக் கொள்கையை நீங்களும் ஏற்று இக்கலை விழாக்களை ஆதரிப்பீர்கள் என்று நம்புகிறோம்.

---

ஸம். ஒவ்வொன்றையும் தத்ரூபமாகச் செய்து காட்டினாலன்றி நாடக வடிவம் முழுமை கொள்ள முடியாது. தசாவதார நாடகம் காட்டுவது என்று முடிவாகிவிட்டால் அதை முழுவதும் திறம்படச் செய்து காட்டிவிட வேண்டியதுதானே! அதுவும் புராண பாத்திரங்களை மிக நன்றாக அறிந்து பழகிய மக்களின் எதிரில் அவர்கள் நம்பவைப்பதற்கு அரும்பாடுபட்டாக வேண்டும். ஆளைப்பார்த்தால் ராமனைப் போல இல்லையே என்று ராமனை ஏதோ நேரே பார்த்தவர்கள் மாதிரி சொல்லிவிடமாட்டார்களா?

லட்சக் கணக்கில் உடை, சீன்கள், அணிகள் சிறு சிறு நுணுக்கங்களையும் சிறப்பிக்கச் செலவிட்டு ஒளி மயக்குகளாலும் காட்சித் தொடர்பினாலும் அருமையான வெற்றியை அடைந்திருக்கிறார் நவாப். அவருடைய சிரத்தைக்காக இதைகுறிப்பிடுகிறேன். நாய் வேஷம் போட்டால் குலைக்கத்தானே வேண்டும் என்பது வாழ்க்கையில் கடமையுணர்ச்சியைக் குறிக்க வந்த வாசகம். நாடகமே போட வந்துவிட்டால் எவ்வளவு கர்ம சிரத்தை இருக்க வேண்டுமென்று கூற வேண்டியதில்லை. "தத்ரூபம்" என்று கூறுவதை விட அர்த்த புஷ்டியாக நவாபின் நாடகத் திறமையைக் குறிப்பிட முடியாது.

---

டி. கே. எஸ். சகோதரர்களின் "இமயத்தில் நாம்" நாடகம் பற்றி "வல்லிக் கண்ணன்" அவர்களின் விமர்சனம் அடுத்த இதழில்.



**துறையூர் டி. மு. கோர்ட்**
O. P. 38/1949

மனுதார்:—முத்து வெங்கடாஜல ரெட்டியார்.

எதிர் மனுதார்:—பெ. தா. எசனை பெருமாள் ரெட்டியார் குமாரர் கிருஷ்ணசாமி ரெட்டியார்.

ஷை நம்பர் மனுதார் இறந்த வெங்கடாஜல ரெட்டியாருக்கு பொன்னுசாமி ரெட்டியாரால் வரவேண்டிய பாண்டு கடனை வசூல் செய்ய வார்சு சர்ட்டிபிகேட் கிடைக்க மனுக்கொடுத்து ஏரங்கி 5-12-49-ல் போடப்பட்டிருப்பதால் ஆக்ஷேபணை உள்ளவர்கள் தெரிவித்துக் கொள்ள கோரப்படுகிறது.

(Sd.) V. S நரசிம்மய்யர்,
துறையூர் 27-11-49 — மனுதார் வக்கீல்.

## இதய தாபம்

### லீலாவின் சூழ்ச்சியும், மோகினியின் மனம் மாறுதலும்

(5-பக்கத் தொடர்ச்சி).

லீலா:—பத்து நாட்களுக்கு முன்னால் ஒரு நாள் ஒருவர் கோவிலில் அபிஷேக ஆராதனைகள் நடத்தினர். அன்று சிவனும் கோவிலுக்கு வந்திருந்தார். அபிஷேக ஆராதனைகள் முடிந்தவுடன் கோவில் குருக்கள் எல்லோருக்கும் பிரசாதங்கள் வழங்கிக் கொண்டுவந்தாராம். அப்பொழுதுபாருங்கள்ஒரு தேவடியாக்குட்டியின் திமிரை!—கோவில்தாசியாம். பெயரென்னவோ கிரிஜாவாம். அவள் வேண்டுமென்றே குருக்களைத் தீண்டி விட்டாள்....ஏனம்மா அவள் அப்படி அந்த அர்ச்சகரை அந்த சமயத்தில் வேண்டுமென்றே தொட்டுத் தீண்டலாக்கியது அநீதிதானே.

மோகினி:—சரி கதை பூராவும் சொல்லித் தொலையடி அப்புறம் நீதியையும் அநீதியையும் நான் சொல்லுகிறேன்.

லீலா:—குருக்களய்யருக்கு ரொம்ப ரொம்ப கோபம்வந்து விட்டது. அந்தக் குட்டியை அடி அடி என்று அடித்துத் தள்ளிவிட்டார்.

மோகினி:—அலுப்புடன் சரி நிறுத்தடி உன் கதையை. சற்று நேரத்திற்கு முன் 'அவர்' பெயரை இழுத்தாயே. அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தமடி என்றால்.........

லீலா:—அட என்னம்மா இவ்வளவு அவசரம். அதைத்தான் சொல்லிக்கொண்டு வருகிறேனே அடிபட்ட அவள் மூர்ச்சித்து விழுந்துவிட்டாள். உடனே மாஸ்டர் சிவம் ஓடோடியும் சென்று குருக்களய்யாவைச் சமதானம் செய்து அந்த தேவடியாக் குட்டியையும் தன் கைகளினாலேயே வண்டியில் தூக்கிப்போட்டு வீட்டிற்கு அழைத்துச் சென்று சிகிச்சை செய்வித்தாராம்!

மோகினி:—எனக்கு அப்பொழுதே தெரியும். அவருடன் பழகிய சில நிமிஷங்களிலேயே அவருடைய இளகிய மனதின் தன்மையைக் கண்டு பிடித்துவிட்டேன். அவர்மகா தயாள குணமுள்ளவர். தீனதயாளு. ஏழைகளின் இனியர். அவர் செய்த அந்த நற்காரியத்தைப் போற்றுகிறேன்."

லீலா:—ஐயோ, இதென்னம்மா இப்படி உளற ஆரம்பித்துவிட்டீர்கள். விஷயம் முழுவதையும் கேட்காமல் குரங்கைப் பிள்ளையாராக்குகிறீர்களே....... அவர் அவளை அத்துணை ஆதரவோடு அழைத்துச் சென்றுரல்லவா. அப்படி அவர் நல்லெண்ணத்துடன் நடந்திருந்தால் அவரை ஆயிரந்தடவை விழுந்து விழுந்து சேவிக்கலாமே. ஆனால் நடந்ததோவேறு. நீங்கள் அவர் மீது கொண்டுள்ள இத்தனை அன்புக்கும் நம்பிக்கைக்கும் நேர் எதிராக நடந்து தங்களுக்கு நீங்காத துரோகத்தைச் செய்துவிட்டார். நீங்கள் கொடிய விஷதாரியான பாம்பை அல்லித் தண்டு என்றெண்ணி அதனுடன் விளையாட ஆரம்பித்து விட்டீர்கள். அவர் கிரிஜா என்ற அந்த தாசிப் பெண்ணை முதன்முதல் கண்ட போதே அவளைக் கொட்டக் கொட்டப்பார்த்துக் கொண்டிருந்தாராம். அந்த ஆசையின் வேகம்தான் அவரை அப்படியெல்லாம் செய்யத் தூண்டியிருக்கிறது. அவர் அவளுக்கு வேண்டிய கிச்சைகளைச் செய்து அவளைத் தன்னுடன் தன் வீட்டிலேயே வைத்துக்கொண்டாராம். அவளுடைய தங்கையும் தங்களுடனிருப்பது அவர்களுடைய தகாத காரியங்களுக்கு இடையூறாக இருக்குமென்றெண்ணி வேறு ஊரிலுள்ள அனாதாஸ்ரமப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பிவிட்டாராம். இப்பொழுது வீட்டில் அவர்களிருவரும் தனி ராஜ்யம் நடத்துகிறார்கள். அவர் அவளை முழுக்க முழுக்க காதலிக்கிறாராம்! சீக்கிரம் அவளை மணந்துகொள்ளவும் போகிறாராம். இந்நேரம் அவர்களுடைய 'காதல்லீலைகள்'கூட நடந்துமுடிந்திருக்கும். நான் சொல்லுவதில் உங்களுக்கு நம்பிக்கையில்லாவிட்டால், பாருங்களம்மா நம்வீட்டுக்குஅடிக்கடி வந்துகொண்டிருந்த அவர் இப்படி அடியோடு வராமலிருப்பாரா...என்று மேலும் கிண்டிவிட்டாள்.

இப்படிச் சொல்லி வரும்போது அவள் மோகினியினுடைய முகம் எவ்விதம் மாறி வருகிறதென்பதையும் கடைக் கண்களால் பார்த்துக் களிகூர்ந்து கொண்டாள்.

லீலா எப்படியோ மோகினியின் மனத்தில் விஷத்தை நாட்டிவிட்டாள். அது அதிதுரிதமாக வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. அவள் மனதில் விவரிக்க முடியாத வேதனை உணர்ச்சி உண்டாகியது. மேலும் அவனைப்பற்றி விசாரித்தறியக் கூட விருப்பமின்றிச் சரேலென்று போய் விட்டாள் வெறுப்போடு. சில நிமிஷங்கள் அவளுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. ஏமாற்றத்தின் எதிரொலி அவளைச் செயலற்று இருக்கும் படிசெய்து விட்டது. இப்படிப் பல நிமிஷங்கள் கழிந்த பின் தனக்குள்ளேயே சிந்திக்கலானாள்....லீலா கூறிய நிகழ்ச்சிகள் நிஜமாக இருக்குமா?......ஆமாம் அப்படித்தானிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர் என்னை அடியோடு மறந்துபோக முடியுமா? மேலும் லீலாவுக்கு இப்படிப் பொய் சொல்லி என்ன பயன்? ஏன் அப்படிச் சொல்லப் போகிறாள்? "இல்லாமற் பிறவாது அள்ளாமற் குறையாது" என்று சொல்வார்கள் — இதையெல்லாம் எண்ணும் போது லீலா கூறியது அத்தனையும் உண்மையாய்த் தானிருக்க வேண்டும்...

தன் காதலுக்குப் போட்டியாக எழுந்த "அவள்" மீது அவளுக்கு அளவில்லாத கோபமும் பொறாமையும் உண்டாயிற்று. சிவன் மீது அந்தக் கோபம் பாய்ந்தது. "தூ! என்ன மனிதன் அவர். ஒரு நிலையான புத்தியில்லாதவன். பசுத்தோல் போர்த்த புலி. இவ்வளவு அற்ப புத்தியும் வஞ்சகமும் நிறைந்த மனிதனைக் காதலித்துக் கல்யாணமும் செய்து கொள்ள இருந்தேனே. நல்ல வேளையாக நான் ஏமாறுதபடித் தடுத்தாள் லீலா. இயற்கையும் துணை செய்தது என் விஷயத்தில். எல்லாம் நன்மைக்கே.

உடன் பிறவா மாமலையிலுள்ள
மருந்தே பிணி தீர்க்கும்.

என்றபடி என் தாயாரால் குறிப்பிடாத பாலனாலேயே என்பிணி தீர்க்கப்படும். நான் இறுதியாகப் பாலனையே மணந்து கொள்வதென்று முடிவு செய்து விட்டேன். என்னுடைய மனதை இரும்பாகச் செய்து கொண்டேன். இனி எவராலும் அதைக் கரைக்க முடியாது "என்றெல்லாம் தன் மனதிற்குள்ளேயே உறுதிப் படுத்திக் கொண்டாள்.

மோகினி ஏதேதோ எப்படியோ தன் உள்ளத்திற்குச் சமாதானம் கூறித் தேற்றிக் கொள்ள முயன்றாலும் அதையெல்லாம் மீறிக்கொண்டு சொல்ல முடியாத ஏமாற்றமொன்று அவள் மனதின் ஒரு மூலையிலிருந்து புகைந்துகொண்டிருந்தது. இந்நிலையில் அதைச் சற்றே மறைந்திருப்பதற்காக மேல் மாடியின் முகப்பிற்கு வந்து தெருவில் போவோர் வருவோரையெல்லாம் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"சிவனைத் தான் வெறுப்பதும் அவமதிப்பதும் நீதியா. அவருக்கு இஷ்டப்பட்ட ஒருவரைக் காதலிக்கவும் மணந்து கொள்ளவும் அவருக்கு உரிமையுண்டு. அதில் குறுக்கிட நான் யார்?" என்று தன் மனதையே ஆறுதல் செய்து கொண்டிருந்தாள். அவளுடைய அந்த ஆறுதலுக்கு இணங்காது அந்த மனது முரண்டிக் கொண்டிருந்தது.

அச்சமயம் தெருவில் போய்க்கொண்டிருந்த ஒருமோட்டார் அவள் பார்வைக்கு நேரே வரவும் நெருப்பை மிதித்து விட்டவள்போல் பதைத்தாள். அதில் லீலாவால் கதை கதையாகக் கூறப்பட்ட தாசிப் பெண் கிரிஜாவும் சிவனும் அருகருகே அமர்ந்தபடியே சென்று கொண்டிருந்தார்கள். மோகினியின் பார்வையில் இதுபடவும் அவள் ஆத்திரத்தோடு தன பற்களைக் கடித்துக் கொண்டாள். முகத்தையும் கோரமாகச் சுழித்தாள் அவளுடைய பார்வைக்கும் பற்களுக்கும் மட்டும் ஏதேனும் விசேஷ சக்தியிருந்தால் அந்த மோட்டார் நொறுங்கிப் போயிருக்கும். அல்லது பொசுங்கிப் போயிருக்கும். கண்ணெதிரே கண்டதற்குப் பின் அவள் மனதில் சிறிதளவு இருந்த சந்தேகமும் நீங்கிவிட்டது. ஓரளவு இளகிப்போயிருந்த அவள் மனதில் இப்போது வைரம்பாய்ந்து விட்டது.

* * * *

சிவன் அனாதாஸ்ரமம் வேலைகளைத் துவங்கிவிட்டானல்லவா. அது சம்பந்தமாக பம்பாயிலுள்ள ஒரு சேட் ஆசிரமத்திற்குத் தேவையான இரும்பு சிமண்ட் முதலிய சாமான்களில் ஒரு பெரும் அளவு தான இனமாகக் கொடுத்துதவுவதாக ஏற்கனவே ஒப்புக்கொண்டிருந்தார் ஆசிரம வேலைகளை ஆரம்பமானவுடன் நேரே தன்னிடம் வந்தால் அவைகளைக் கொடுப்பதாகச் சொல்லியிருந்தார். அதன்படியே அவன் பம்பாய்க்குப் புறப்பட்டான். கிரிஜாவும் இரயில்வே ஸ்டேஷன் வரையில் வந்து வழியனுப்ப விரும்புவதாகக் கூறவே அவளையும் அழைத்துக் கொண்டு போனான். அதையே மோகினி கண்டு கலவரமடையவும் கடுங்கோபம் கொள்ளவும் நேர்ந்தது. சிவனுக்குக் காரை மோகினியின் இல்லத்திற்கு முன் நிறுத்தி அவளிடமும் சொல்லிவிட்டுப்போக வேண்டுமென்றுதான் ஆசை. ஆனால் இரயிலுக்கு நேரமாகி விடவே அந்தயோசனையைக்கை விட்டான்.

நிற்க, மோகினியின் மனதைக் கரைத்து விஷவித்தை ஊன்றிய லீலா தான் செயற்கரிய செயலொன்றைச் செய்துவிட்டதாக எண்ணிப் பூரித்துப் போனாள். தன் வெற்றிகரமான சாதனையை —சுபச் செய்தியை—அப்பொழுதே பாலனிடம் கூறிவிடவேண்டுமென்று துடித்தாள். உடனே ஒரு விதமாக விடைபெற்றுக்

(11-ம் பக்கம் பார்க்க)

# உலகில் ஒப்பற்ற தனிபெறும் தலைவர் பண்டித நேரு

## சமாதான நோபல் பரிசுக்கு அவரே உரியவர்

எகிப்தியப் பத்திரிகைகள் பிரதம மந்திரி பண்டித நேருவின் அமெரிக்க விஜயம் பற்றியும் அவர் கெய்ரோவில் தங்கிச் சென்றதைப் பற்றியும் எழுதுகையில், 'சமாதானம்' 'நேச உறவு' எல்லோருக்கும் சுதந்திரம்' என்று அல்லும் பகலும் பேசி, உழைத்து வரும் நேருவை விட உலகில் ஒப்பற்ற தலைவராக வேறு யாரைக் குறிப்பிட முடியும் என்று பாராட்டியிருக்கின்றன :—

எகிப்தில் கெய்ரோவிலிருந்து வெளிவரும் மாலை தினசரியான 'அல் மொகாட்டம்' என்னும் பிரபல கட்சிச்சார்பற்ற பத்திரிகை, 'போர் வாள்கள் ஒன்றை ஒன்று முட்டித் தாக்கும் ஆரவாரத்தில் நேருவின் சமாதானம் குரல் எடுபடுமா?' என்ற தலைப்பின்கீழ் சமீபத்தில் எழுதிய தலையங்கத்தில் பிரதம மந்திரியின் அமெரிக்க விஜயம் பற்றி விரிவாக ஆராயப்பட்டிருந்தது. அதைத் தொடர்ந்து அப் பத்திரிகையின் பிரபல எழுத்தாளரான வாடி வலாஸ்டீன் 'பண்டித நேரு தான் உலகத்தின் மாபெரும் அரசியல் மேதை' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரை முதல் பக்கத்தில் பிரதானமாகக் பிரசுரிக்கப்பட்டிருந்தது.

அக்டோபர் 21-உ யன்றைய தலையங்கம் பின்வருமாறு கூறியது: 'பாலைவனத்தில் ஒரு குரல் கேட்கிறது'

இந்த வசனம் அருந்தலைவரும் மாபெரும் அரசியல் மேதையுமான பண்டித ஜவகர்லால் நேரு மனந்திறந்து கூறிவரும் மகிழ்ச்சி தரத்தக்க பேச்சுகளுக்குப் பொருத்தமான அடைமொழியாக அமையும் என்றே நாம அஞ்சவேண்டியிருக்கிறது.

நேரு அமெரிக்காவுக்கு விஜயம் செய்ய அழைக்கப்பட்டார். அவரது சுற்றுப் பிரயாணத்திடையே பல இடங்களில் பிரசங்கங்கள் புரிவதற்கும், பத்திரிகையாளருடன் பேசுவதற்கும், ரேடியோவில் சொற்பொழிவாற்றுவதற்கும், பொது மக்களைச் சந்திப்பதற்கும் வாய்ப்பளிக்கப்பட்டது. அவர் சமாதானத்தைப்பற்றி மட்டிலுமே பேசினார்; ஒருமுகப்பட்ட உழைப்பும், நட்புறவும கூட்டுறவும் வேண்டுமென்று கோரினார். மக்கள் தங்களுக்குள் உள்ள சச்சரவுகளை ஒதுக்கி வைத்துவிட்டு, பயத்துக்கிடங் கொடாமல் மன உறுதியை வலுப்படுத்தும் படி வற்புறுத்தினார்.

'யுத்தம் வந்தால் இந்தியா எந்தக் கட்சியை ஆதரிக்கும்' என்று அவரிடம் கேட்கப்பட்டது.

'யுத்தம் எதுவும் வராமலிருந்தால் நல்லது' என்று அவர் பதிலிறுத்தார்.

''இந்தியா கம்யூனிசத்தை எதிர்க்குமா?'' என்றும் அவரிடம் வினவப்பட்டது.

'பிளவுகள்பற்றி ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். உலக சமாதானமாகவும் பத்திரமாகவும் இருக்கும்படி பாதுகாக்கும் பொருட்டு கிழக்குத் தொகுதி நாடுகளும் மேற்குத் தொகுதி நாடுகளும் ஒத்துழைத்தால் நல்லது' என்று அவர் விடையளித்தார்.

அவரது நாக்கு 'சமாதானம்' என்ற ஒரே வார்த்தையைத்தான் சதா ஸ்மரணை செய்கிறது; அவரது உள்ளம் 'நட்புறவு' ஒன்றையே நாடுகிறது; அவரது ஆத்மா உலகமக்கள் சந்தோஷமாக இருந்தால் மட்டிலுமே சந்தோஷமடையும்.

எனவே, 'நேரு இன்று ஆசிய நாடுகளின் சுதந்திரத்தின் முக்கிய சின்னமாக விளங்குவதோடன்றி, உலகத்தின் சகல தேசங்களுடைய சுதந்திரத்தின் சின்னமாகவும் விளங்குகிறார்' என்று கொலம்பியா சர்வகலாசாலைத் தலைவரான ஜெனரல் ட்வைட் ஐசன்ஹோவர் நேருவுக்கு கௌரவ 'டாக்டர் ஆவ் லாஸ்' பட்டத்தை அளிக்கும் போது கூறியது மிகவும பொருத்தம் தான்.

நேருவைப்பற்றி நாம் தெரிவதற்கு மற்றவர்களுடைய கூற்றுக்களை நாம் எதிர்பார்த்திருக்கத் தேவையில்லை பலதடவை அவரை நாமே நேரில் கெய்ரோவில் சந்திக்கும் சந்தர்ப்பம் கிடைத்து தான் இருக்கிறது. சூழ் நிலைமை அவநம்பிக்கையைத தரக் கூடியதாக இருந்தபோதிலும் கூட அவர் நம்பிக்கையுடன் இருப்பதைக்கண்டு நாம் உவகையுறுகிறோம. அவர் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தைப்பற்றிப் பின்வருமாறு கூறியதைக் கேட்டோம: ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் அதன் சகல லட்சியங்களிலும் வெற்றி கண்டுவிடவில்லை என்பது என்னவோ உண்மைதான்; ஆனால், அதுதான் உலகம் நிரந்தர அமைதியை அடைவதற்கு முன்னேறிச் செல்வதற்கான பிரதான தலைவாசலாக இருக்கும்.'

நேருவின் வாக்கு நல்ஆசி வாக்கு அதே சமயத்தில் அது ஒரு எச்சரிக்கையுமாகும். எல்லா நாடுகளும அச்சொல்லுக்குச் செவிசாய்த்தால் அது நல்வாக்குதான்; யுத்த பயித்தியம் தலைவிரித்தாடுவது வரையில் அது எச்சரிக்கையாகவே இருக்கும. இன்று உலகத் தலைவர்களுள் எவருக்காவது நோபல் சமாதானப் பரிசைப் பெறுவதற்கு உரிமை உண்டு என்றால் அது பண்டித நேருக்குத்தான. அவர் ஒருவர்தான், லௌகிக விஷயங்களால் பெரும்பாலும் விளங்கப்பட்டு நிற்கும் இவ்வுலகில், மனித சமுதாயத்தின் சகோதரத்துவத்தைப் பற்றியும் அதன்பால் அன்பு காட்டவேண்டியதையும் பற்றியும பிரசாரம் செய்து வருகிறார்.

அக்டோபர் 31-உ யன்று பின் கண்ட கட்டுரை பிரசுரமானது:—

இத் தலைமுறையிலுள்ள அரசியல் தலைவர்களில் பிரசிடெண்ட் ரூஸ்வெல்டுக்கும் பிறகு உலகத் தலைமைப் பதவிக்கு வரவேண்டியவர் யார்?

பிராங்க்லின் ரூஸ்வெல்ட் அவரது அதியற்புத சாதுர்யத்தாலும் தீர்க்க திருஷ்டியாலும் உயர்ந்த அறிவு விளக்கத்தாலும், சிறந்த கோட்பாடுகளாலும், அழிவுக்காக அல்லாமல் ஆக்கத்துக்காகப் பயன்படுத்திய அவரது அதிகாரத்தாலும் உலகத்தின் முதல் தலைவராக இருந்தார் என்பதில் தடை எதுமில்லை. யுத்தத்தை அவர் ''சமாதான முறை'' என்று கூறக் கூடிய ரீதியில் நடத்தி வைத்தார்; சமாதானத்தைத் திருப்பக் கொண்டு வருவதற்காகவே அவர் யுத்தத்தில் இறங்கினார்.

ரூஸ்வெல்ட் இறந்த பின் சிங்கத்தின் ஸ்தானம காலியாய் விட்டது.

சிங்கத்தின் ஸ்தானம் காலியாவதற்கு சர்ச்சில், ஆட்லி, ட்ரூமன், பெவின், ஸ்டாலின் கிரிப்ஸ் பிராங்கோ, அல்லது வேறு எந்த நபரையும ஆற்றல் வேகத்திலும் பணிவு உள்ளத்திலும் ரூஸ்வெல்டுக்கு ஈடாகச் சொல்ல முடியாதிருப்பதுதான் காரணம்.

ஆயினும், ரூஸ்வெல்டின் ஸ்தானத்தை நிரப்புவதற்குத் தகுந்த ஒரு மனிதர் இருக்கத்தான் செய்கிறார் என்றே நாம் நம்புகிறோம். அவர் சமாதானமும் சகோதரத்துவமும் நிலவ வேண்டுமென்று கோரி வருவதுடன் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் குறைபாடுகளை நிவர்த்திப்பதற்கும் முயன்று வருகிறார். விஷயங்களைத் தெளிவாகவும பரிபூரண அறிவுடனும அவர் ஆராய்கிறார்; எதிர்காலத்தை மிகவும எட்டியோசிக்கிறார், அவரது ஆற்றல் வேகத்தாலும அபார பேச்சுத் திறத்தாலும் அவர் மக்கள் உள்ளத்தைக் கவர்கிறார்.

நான் இந்தியாவின் பிரதம மந்திரி பண்டித ஜவகர்லால் நேருவையே குறிப்பிடுகிறேன். நேருபால் உள்ள ஒரே ஒரு குறைபாடு, சர்வதேச அரசியல் அரங்கத்தில் ''சிறியநாடு'' என்னும, பாதுகாப்புக் கௌன்சிலில் நிரந்தர ஸ்தானத்துக்கு உரியதல்லவென்றும, உலகத்தின் விதியை நிர்ணயிக்கும் விவகாரங்களில் ஐந்து வல்லரசுகளைப் போல் பங்கெடுத்துக்கொள்ளத் தகுதியற்றதென்றும கருதப்படுகிற தேசத்தைச் சேர்ந்தவராக இருப்பதுதான்.

நேருவின் குறைபாடு, அவர் கீழ்த் திசை நாடுகளில் தோன்றியவர் என்பது தான்; கீழ்த்திசைநாடுகளில் உற்பத்தியாகும எல்லாப் பொருள்களுமே மேல் திசையில் மதிக்கப்படுவதில்லை.

சமீபத்தில் நேரு அமெரிக்காவில் சுற்றுப் பிரயாணம் செய்கையில் செய்த பல பிரசங்கங்களையும நான் நுணுக்கமாகக் கவனித்து வந்தேன்; அவர் பத்திரிகையாளரிடம் கூறியவைகளைப் படித்தேன்; அவருக்கு அளிக்கப்பட்ட அபார வரவேற்பைப்பற்றி அமெரிக்கப் பத்திரிகைகள் எழுதிய விவரத்தையும வாசித்தேன். அமெரிக்க ஜனாதிபதிகூட அவரை விமானத் தளத்திற்குச் சென்று வரவேற்றார்; ட்ரூமன் ஒரு நாட்டின் அதிபராகையாலும் நேரு ஒரு பிரதம மந்திரியாகையாலும் உபசார சம்பிரதாய விதிகளின்படி அவர் அப்படிச்சென்று வரவேற்கக் கூடாதென்று தடையிருந்துங்கூட அவர் அவ்வாறு செய்தார்.

கொலம்பியா சர்வகலாசாலை அதிபர் ஜெனரல் ட்வைட் ஐசன்ஹோவர் பண்டித நேருவுக்கு கௌரவ ''டாக்டர் ஆவ் லாஸ்'' என்றும் பட்டத்தை வழங்கியபோது அவருக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு பற்றியும நான் படித்தேன்.

ஸ்ரீமதி ரூஸ்வெல்ட் ''எனது நாள்'' என்ற அவரது அன்றாடக் குறிப்புப் பத்தியில் எழுதிய கட்டுரையையும்படித்தேன். நேருவுக்குரியதான அவ்வளவு பாராட்டுக்களையும் அவர்தெரிவித்திருந்தார். நேரு எல்லாப் பெருமைகளையும் பெற வேண்டியவர்தான்.

நான் இவைகளனைத்தையும் விடாது படித்துவந்தேன்; மேலும், முப்பது வருஷங்களுக்கு முன், செல்வச் சிறப்புள்ள இந்த இளைஞர் தமது நற்பாக்கிய நிலையையும் போகவாழ்வையும் உதறி எறிந்துவிட்டு ஒரு துறவியாக, தம நாட்டைக் காப்பாற்றும பொருட்டுச் சிறைவாசத்தை ஏற்க நேர்ந்ததையும் முன்பே படித்தும் இருக்கிறேன் அவர் கெய்ரோவில் சென்ற வருஷம் பத்திரிகையாளர் கூட்டத்தில் பேசிய போதும் அவருக்கு அளிக்கப்பட்ட வரவேற்பின் போதும் நேர் முகமாய்ச் சந்தித்ததுடன் நேரடியாகவும் மற்றப்படியும அவருடன் பேசியும் இருக்கிறேன்.

இவையெல்லாம் சேர்ந்து, நேருதான உலகத்தின் 1-வது அரசியல் தலைவர் என்று என்னைக் கூறும்படி செய்கின்றன; அவரை விட யாரும் சிறந்தவராக இருக்கவும் முடியாதென்றே நினைக்கிறேன்; மி. ட்ரிக்வ்லி மி. பால் ஹென்றி ஸ்பாக் இருவரும் உட்பட்டதான். எனவே, நோபல் சமாதானப் பரிசுக்குப் பெயர் குறிப்பிடும பட்டியலில் நேருவின் பெயர் தலைப்பில் இருக்க வேண்டும். அவர் சமாதானம, நட்புறவு உயரிய லட்சியங்களில் அந்தரங்க சுத்தி ஆகியவைகளையே வாழ்க்கையின் அடிப்படையாகக் கொண்டவர். அரசாங்கத்தில் அவர் வகிக்கும் பதவியை விட்டுவிட்டு, வீதியிலே போகும் சாமானிய மனிதருடன் காந்திபோல்தரையில் கால் மடித்து உட்கார்ந்து நூல் நூற்கும் பண்மையும் உடையவர்.

இவையெல்லாம் நேருவின் விவரணத்தில் ஒரு கூறுதான. இதர கூறுகளும்நான் விவரித்திருக்குமபகுதியைப போலவே மகத்தானவைதான்.

# ரோடரி அச்சு இயந்திரம் வளர்ந்த வரலாறு



காக்ஸ்டன் முதன்முதல் அச்சு இயந்திரம் கண்டுபிடித்ததிலிருந்து அச்சுக்கலை இன்று எவ்வளவோ முன்னேறியிருக்கிறது. மிகக் குறைவான தொழிலாளர்களைக்கொண்டு விரைவில் அதிகப்படியான பிரதிகள் அச்சிடக்கூடியபடி இன்று இக்கலை வளர்ச்சி அடைந்துள்ளது. அச்சுத் தொழில் சம்பந்தப்பட்ட புதுப்புது இயந்திரங்களெல்லாம் லண்டன் "டைம்ஸ்" பத்திரிகை காரியாலயத்திலிருந்து வெளிவந்தவையே. இத்துடன் பிரசுரிக்கப்பட்டிருக்கும் படங்கள் அக்காரியாலயத்தில் எடுக்கப்பட்டவைதான்.



அச்சு கோர்ப்புபற்றிய புது முறையொன்றை பிரபலப்படுத்துவதற்காகவும், விளம்பரங்கள் மூலம் வர்த்தகத்தை விஸ்தரிப்பதற்காகவும் 1785-ம் வருடம் ஆரம்பிக்கப்பட்ட "டைம்ஸ்" பத்திரிகை இன்று உலக முழுவதிலும் பிரசித்தி பெற்றுள்ளது. இப் பத்திரிகை ஆரம்பிக்கப்பட்டபோது இது ஐரோப்பா கண்டச் செய்திகளை வெளியிட ஆரம்பித்ததால் விரைவில் பிரபலமாயிற்று என்றாலும் அதுபோது இப் பத்திரிகை கைகளினால் இயக்கும் இயந்திரத்திலேயே அச்சிடப்பட்டு வந்ததால் மிகச் சொற்பமான பிரதிகளே பிரசுரிக்க முடிந்தன.



இப் பிரச்சினையை தவிர்ப்பதற்காக பத்திரிகையின் சொந்தக்காரர் கஷ்டப்பட்டு ஆராய்ச்சி செய்து 1814ம் வருடம் நீராவியால் இயங்கும் அச்சு இயந்திரமொன்றை முதன் முதலாக தயாரித்தார். 15ம் நூற்றாண்டுக்குப்பின் இதே நீராவி இயந்திரத்தின் உதவியைக்கொண்டு "டைம்ஸ்" பத்திரிகை தன் "சர்க்குலேஷனை" பன் மடங்கு அதிகரித்துக்கொள்ள முடிந்தது. செய்தித்தாள்கள் அச்சிடும் துறையில் நவீன இயந்திரங்களைக் கண்டு பிடிப்பதில் இன்றும் டைம்ஸ் பத்திரிகை முன் நிற்கிறதென்றால் இதற்கான "அஸ்திவாரம்" அன்றுதான் நாட்டப்பட்டது.

நீராவி இயந்திரத்தைத் தொடர்ந்து பல புதுப்புது இயந்திரங்களை "டைம்ஸ்" பத்திரிகை கண்டுபிடித்து வந்தபோதிலும் 1868ம் வருடத்தில்தான் இப்பத்திரிகை அச்சுக்கலையிலேயே ஒரு பெரிய புரட்சியை ஏற்படுத்தியதெனலாம். ஏனெனில் அவ்வருடம்தான் 'டைம்ஸ்' பத்திரிகை முதல் ரோடரி அச்சு இயந்திரத்தைத் தயாரித்தது. இன்று நாம் சர்வ சாதாரணமாகப் பேசும் ரோடரி இயந்திரங்களுக்கு இதுதான் மூதாதை. 'டைம்ஸ்' பத்திரிகையின் ஸ்தாபகரின் குடும்பப் பெயரையொட்டி இந்த முதல் ரோடரி அச்சு இயந்திரத்துக்கு 'வால்டர்' என பெயரிடப்பட்டது.

அச்சுக்கலையிலேயே புரட்சியை ஏற்படுத்தி வந்துள்ள இந்த டைம்ஸ் பத்திரிகைதான் "விமான பதிப்பு" பிரசுரிக்கும் முறையை முதன் முதலாக ஆரம்பித்து வைத்ததென்பது எவ்விதத்திலும் ஆச்சரியமளிக்காது. டைம்ஸ் பத்திரிகை 1944ம் வருடம் ஆரம்பித்த இப் புதிய முறை "மிகப் பெரிய தொழில் நுணுக்க வெற்றி" யென்றே எங்கும் பேசப்பட்டது.

---





## இதய தாபம்

### லீலாவின் சூழ்ச்சியும், மோகினியின் மனம் மாறுதலும்

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

கொண்டு பாலன் மாளிகையை நோக்கி விரைந்தாள். மாடிமீது அவன் ரூம் இருந்தது. அங்கே போனாள். அறைக் கதவு லேசாக மூடியிருந்தது. ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தாள். பாலன் ஏதோ ஆழ்ந்தயோசனையில்இருந்தான். மாற்றி மாற்றி சிகரெட்டைப் பரபரப்பாக இழுத்து புகையை வெளிப்படுத்தினான். அவன் எவ்வளவுக் கெவ்வளவு ஆழ்ந்து சிந்திக்கிறான் என்று அர்த்தம் அந்த உட்பொருளை லீலாவும் அறிவாள். அவள் கதவை இடித்தாள். பாலன் கதவைத் திறந்தான். லீலாவைக் காணவும் அன்றிரவு பார்த்த குளிர்ந்த பார்வையுடன் வரவேற்றான். அவள் முகத்தில் தாண்டவமாடிய அபரிமிதமான களையைக் கண்டவுடன் முன்போல் கதவைச் சாத்திவிட்டு "லீலா என்ன சமாச்சாரம். உன் முகத்திலே அபரிமிதமான சந்தோஷத்தின் சாயை காணப்படுகிறதே. அதன் காரணம் என்ன? ஏதாவது சந்தோஷச் செய்தியாகத்தானிருக்க வேண்டும். என்ன காரியம் பழுந்தானே!"

முழுப் பழந்தான். காரியம் கைகூடிவிட்டது. மோகினியின் மனத்தை முற்றிலும் மாற்றிவிட்டேன் என்றாள்.

"சபாஷ்! எனக்கு அப்பொழுதே தெரியும். உன் சாமர்த்தியத்தில் எனக்கு எப்பொழுதும் நம்பிக்கையுண்டு" என்று அவள் முதுகில் தட்டிக்கொடுத்தான். ஆனால், இன்னும் உன்னால் எவவளவோ காரியங்கள் ஆக வேண்டியிருக்கிறது. இதோ இதை வைத்துக்கொள் என்று கூறி இன்னும் நான்கு பத்து ரூபாய் நோட்டுகளை நீட்டினான். பின்னர் "லீலா, மோகினியின் மனமாறுதலைப் பூர்ணமாக நம்பிவிடவுங் கூடாது. அவளொரு திடமான எண்ணமுடையவளல்ல. சஞ்சல சுபாவமுடையவள். நிமிஷத்துக்கொரு முறை மாறும் அவள் உள்ளம். கட்டவிழ்த்துக் கொண்டோடிய வேதாளம் மாதிரி, கட்டுப்படுத்தப்பட்ட அவள் மனம் உடனேயே சிவன் மீது ஆதரவுடன் பாய்ந்தாலும் அதில வியப்பு இராது. நமது காரியங்கள் கைக்கூட இன்னும்சில பலத்த காரியங்கள் செய்யவேண்டும். முதலாவதாக சிவனும்—மோகினியும் எக்காரணத்தைக்கொண்டும் சந்திக்க இயலாதபடியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கச் சம்பந்தமில்லாதபடி செய்ய வேண்டும். இருமுகங்கள் நேரில் சந்திக்கும்போது உள்ளப்பூசல்களெல்லாம் ஓரளவு தீர்ந்தே போகின்றன அல்லவா. சிவன் விஷயத்தில் இந்த வாய்ப்பை நாம் அளிக்கக்கூடாது. நான் சில யோசனைகள் செய்துவைத்துள்ளேன்...நீ இப்போது ஒரு காரியம் செய்யவேண்டும். சிவனுடைய குணம் எனக்குத்தெரியும். அவனது உத்தம குணத்தில் எனக்கு நம்பிக்கையுண்டு. இந்த மாதிரி செய்தால் வெகு விரைவில் காரியம் கைகூடும். நீ இப்பொழுது சிவனுக்கு மீனா எழுதுவதுபோல் ஒரு கடிதம் எழுதவேண்டும். அதிலமோகினி-சிவன் காதலில் அவளுக்குத் திருப்தியில்லையென்றும் மோகினியின் நன்மையைக் கருதி அவள் திருமணம் நடந்தேறும் மட்டும் அவன் கண்ணுக்கெட்டாத தூரதேசத்தில் சென்று வசிக்க வேண்டுமென்று கோருவதாகவும் எழுதி சிவன் வீட்டில் கொடுத்து அவன் வந்தவுடன் கொடுக்கச்சொல். அவன் நாலைந்து தினங்களில் திரும்பி வருவான். வந்தவுடன் கடிதத்தில கண்டபடியே நிச்சயம் நடந்துகொள்வான். நீயும் அந்த தாசிப் பெண்ணிடம் சிநேகிதம் செய்துகொள். மெல்ல அவள் மனதை அறிந்து அவள் எதில் நாட்டமுள்ளவளாயிருக்கிறாளோ, அந்தவழியில் ஆசையை மூட்டி அவளையும் அவனுடன் போகும்படி செய்" இன்னும் அப்படிச் செய்யவேண்டும் இப்படிச்செய்ய வேண்டும் என்று அவள் காரியத்துக்கு அனுகூலமாக யோசனைகள் சிலவும் சொன்னான்.

(தொடரும்)

## நாகரீகத் திருடி

(2-பக்கத் தொடர்ச்சி)

டியோ? என்று கேள்விகளை அடுக்கினேன்:

"எங்கேயுமில்லேடா. பம்பாயில்தான் 'சூர்யா'ங்கிற ஆங்கில வாரப் பத்திரிகையிலே, புகைப்பட நிருபராக இருக்கேன். வெளியூர் அலைச்சல் ஜாஸ்தி அதனாலேதான் கடிதம் போட முடியலே," என்று ஆங்கிலம் கலவா தமிழ் பேசினான், ஆங்கில வாரப்பத்திரிகையில் வேலை செய்யும் அவன்.

அதற்குள், அவன் இறங்க வேண்டிய ஸ்டேஷன் வந்துவிட்டது.

"நான் கடுதாசி போடலாம்னாலும் உன் விலாசம் தெரியலே, உன் அட்ரஸை கொடு குறிச்சிக்கிறேன்," என்று பையைத் தடவினேன் பேனாவை எடுக்க. திடுக்கிட்டேன், திகைப் பென்னை கவ்வியது.

பேனா காணப்பட வில்லை.

ரயிலில் ஏறும்போது இருந்தது, இப்போது காணபபட வில்லை என்றால் ..........எங்கெங்கோ தேடிப்பார்த்து விட்டேன், கிடைக்கவில்லை.

ஸ்டேஷன் வந்து விட்டது; நண்பன் பாபு இறங்கிவிட்டான். இறங்கியவன கதவருகில நின்று "பாபு-சூர்யா காரியாலயம் பம்பாய்-4."; தன் விலாசத்தைக் குறித்துக் கொடுத்தான்

"டேய் கடிதம் போடு-மறந்துடாதே," என்று விடைபெற்றுக் கொண்டான் பாபு

ரயில் தன் பிரயாணத்தைத் தொடர்ந்தது.

என் எண்ண மெல்லாம் காணாமற் போன பேனாவிலேயே ஒன்றிருந்தது.

அது மறைந்த விதம்.......?

பக்கத்தில் உட்கார வைத்துக் துக்கொண்டு பரவசத்திலாழ்த்திய கன்னியின் கைங்கரியமோ? காணாமற்போய் விட்டதென் பேனா. தோளைச் சுற்றி அணைத்து தன் நிலைமறக்கச் செய்து தட்டிப் பறித்துக் கொண்டாளோ? அழகைப் பிரயோகித்து ஆனந்த லாகிரியில் ஆழ்த்தி அடியேன் பேனாவை அபகரித்துக் கொண்டாளோ?

"ஆமாம்," என்று ஊர்ஜிதப் படுத்துவது போல இஞ்ஜின் கூவிற்று.

"நாகரீகத்திருடி:" என்னையறியாமல் என் உதடுகள் இந்த வார்த்தையை முணுமுணுத்தன.

---

# வியப்பும் வேதனையும்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

இருக்கும் பொத்தானை அமுக்கி விடலாம். அதிலும் இதேமாதிரி எண்ணிக்கை கூட்டிக்கொள்ளப் படும்.

எப்படியும் எதாவது ஒரு பொத்தானை அமுக்கியே தீர வேண்டும். ஏனெனில் மீண்டும் வாசல்கதவு திறப்பதற்கு. வாக்குப் பொத்தான்களில் விசை யிருக்கிறது. வாக்குப் பொத்தான்களை அமுக்காமல் மறுபடியும் கதவு திறக்காது. பொத்தானை அமுக்கிவிட்டு மீண்டும் அறைக்குள் கதவு நிலை அருகே வந்து நின்றதும் அவருடைய கனத்தால் கீழேயிருக்கும் குழாய் விசை இறங்கி கதவு திறக்கிறது. படியைத்தாண்டி கீழே இறங்கியவுடனே விசை மீண்டும் பழைய நிலைக்கு உயர்ந்து கதவு மூடிக்கொள்கிறது. கதவு மூடிய தருணத்தில் முன்பு வெளியே இருக்கும் மேஜைமேல் அழுத்தப்பட்ட பொத்தான் பழைய நிலைக்குத் திரும்புகிறது.

இப்போது வெளியே இருக்கும் மேஜையில் இத்தனைபேர் மொத்தம் வாக்குப்பதிவு செய்கிறார்கள் என்ற கணக்கு இருக்கிறது. உள்ளே இருக்கும் ஒட்டியில் ஒவ்வொரு அபேட்சகருக்கும் தனித்தனியாகப் பதிவான வாக்குகளின் கணக்கும் நடுநிலை வாக்குகளும்குறிப்பிடப் பட்டிருக்கிறது. இனி அடுத்தவர் வாக்குப்பதிவு செய்ய யந்திரம் காத்திருக்கிறது. அந்தக் கதவுக்கு ஆறு சாவிகள் உண்டு. ஒரு மாஸ்டர் சாவி மேஜைக்கு முன்பு இருக்கும் அதிகாரி வசமும் மற்ற சாவிகள் போலிங் ஏஜண்டுகளிடமும் இருக்கும். மாஸ்டர் சாவியுடன் வேறு எந்த இரண்டு சாவிகளையும் சேர்த்து மூன்று சாவிகள் இல்லாமல் கதவைத்திறக்கவோ பூட்டவோ முடியாது. யாராவது உள்ளே சென்று தவறுதலாக யந்திரத்தைக் கெடுத்துவிட்டால் கதவும் திறக்காமல் திண்டாடக் கூடுமாகையால் அந்தமாதிரி சந்தர்ப்பங்களில் கதவைக திறக்க இந்த ஏற்பாடு.

மாலையில் வாக்குப்பதிவு முடிந்த பிறகு மீட்டர்களைப் பார்த்து உடனேயே முடிவு அறிவித்துவிட முடியும்.

வரப்போகும் தேர்தல்களில் இம்மாதிரி யந்திரங்கள் ஜில்லாவுக்குப் பத்து வீதம் இருந்தால் போதுமானதாகும். திறமையான தேர்தல் ஏற்பாடுகளில் இந்த யந்திரம் பயன் படுத்தப் படவேண்டியது அவசியமல்லவா?

சமீபத்தில் சேலம் ராமாநுஜம் என்பவர் தனக்குத் தோன்றிய வழியில் இதுபோன்ற யந்திரம் ஒன்றைத் தயாரித்திருப்பதாகவும் நாயுடு அவர்களே கூறினார். ஆனல் அதுபற்றிய முழு விபரம் எனக்குக் கிடைக்கவில்லை.

(தொடரும்)



## ஏட்டுச் சுரையும் கறிக்கு ஆகிறது!

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

எந்த திட்டமும் வடக்கத்தி மாகாணங்களுக்கே பயன் படுகின்றன வென்பதைப் பார்த்துக் கொண்டிருக்கும் நாள் இந்தத் திட்டமும் அப்படியே ஆகிவிட இடம் கொடுப்பது போல் இருக்கிறது மேலே கூறிய கருத்து.

எனவே சென்னை மாகாண அரசாங்கத்தார் புதிய திட்டத்தின் கீழ் நமது மாகாணத்தின் பங்கை விட்டுக் கொடுக்காமல் பயன் படுத்திக் கொள்ளக் கூடிய அளவில் விஞ்ஞானக் கல்லூரிகளை விரிவு படுத்துவதும் புதிய கல்லூரிகள் தோற்றுவிப்பதும் ஆகிய வேலைகளில் கவலை செலுத்த வேண்டும்.

---

திருச்சிராப்பள்ளி ஸ்மால்காஸ் கோர்ட்டாரவர்கள் சமுகம்
S C. No. 1683/49

ஹாஜி திவான்முகமது அஜிஸ் சுதீன் சாயபு —வாதி
M. கந்தசாமி ஆசாரி—பிரதிவாதி

ஷையார் பிரதிவாதிக்கு தெரிவிப்பது யாதெனில் ஷை கெ. வாதி பிரதிவாதி பேரால் ஏற்பட்ட அனுமத்து புஸ்தகபடி ரூ. 336-11-6 கிடைக்க தாவா செய்து ஷை தாவாவானது 6-12-1949-ல் ஈரங்கி போடப் பட்டிருக்கிறபடியால் ஷை தேதியன்று காலை 11 மணிக்கு ஆஜராகி தங்களுக்குள்ள ஆட்சேபணையை தெரிவித்துக்கொள்ள வேண்டியது தவறினல் ஒருதலை பக்ஷமாக தீர்மானிக்கப் படும்.

S. M. Sheikh Mohideen
Advocate for plaintiff
1-12-49

---

திருச்சி டி. மு. கோர்ட்
O. S. 462/45

திருச்சி தமிழ்பரியாரித்தெரு, அண்ணசாமி பண்டிதர் குமாரர் பாலகிருஷ்ண பண்டிதருக்கு நோட்டீஸ் :—

கிருஷ்ணசாமி பண்டிதர் மகன் கோவிந்தநாதன் தன்னை மேடோவர் வாதி பெற்றுக் கொண்டு ஈட்டுச் சொத்தை ஏலத்திற்கு கொண்டு வருவதற்கும் பின்வரும்படியை நிர்ணயிக்கவும் கொடுத்திருக்கும் I A 1268-1269, 1328/49க்கு, 10-12-49 ஈரங்கிப் போடப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையிருந்தால் கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளவும்.

K. N ராமஸ்வாமி அய்யர்
திருச்சி. மனுதார் வக்கீல்.





திருச்சி 8, சின்னக்கடைத் தெரு, சிவாஜி பிரிண்டிங் ஒர்க்ஸில் ஸ்ரீ M. S. ராஜரெத்தினம் பிள்ளை அவர்களால் அச்சிடப்பட்டது.
ஆசிரியர், திருலோக சீதாராம் பிரசுரித்தது.